நூல் வரிசை எண் - 05

# குழந்தைகளும் நாமும்

(வாழ்விலும் வாசிப்பிலும் பெற்ற அனுபவம்)



**அல்தமிஷ்**



## *சமர்ப்பணம்*

*அன்பென்னும் குடைக்குள்*
*நாம் வாழ்ந்த காலம்*
*இன்னொன்று தேவையென்று*
*கருதவில்லையடி.*

*கண்ணாக உனைப்*
*பார்த்த போது*
*விண்ணகமும்*
*மெய்சிலிர்த்துப் போனதடி*

*உன்னருமை தெரியாத*
*“நான்” என்ற மமதையினால்*
*என்னருமைத் தோழி*
*உன் உறவை இழந்தேனடி.*

*வன்மத்தின் வாளால்*
*வெட்டப்பட்டு*
*வையகத்தின் வசைக்காற்பட்டு*
*வரையறையற்ற வாழ்வுக்குள்*
*சிக்குப்பட்டு*
*வட்டியும் முதலுமாக அனுபவிக்கின்றேனடி.*

*எங்கிருப்பினும்*
*என்ன செய்கிலும்*
*எனக்கான உன்னிடத்தை*
*யாருக்கும் தரமாட்டாய்*
*என் தோழி நீயென்பதால்.*
*வாழ்க வளமுடன் !*

## நூலாசிரியரிடமிருந்து ……

**“சிறியவர்கள் மீது அன்பு செலுத்தாதவரும், பெரியவர்களுக்கு மரியாதை செய்யாதவரும் நம்மைச் சார்ந்தவர் அல்லர்”** என முகம்மத் (ஸல்) அவர்கள் கூறினார்கள். குழந்தைகளுக்கு நாம் முதலில் கொடுக்க வேண்டியது அன்பு. குழந்தைகளிடத்தில் அன்பு செலுத்தாதவர் ஒரு முஸ்லிம் அல்லர் என மேலேயுள்ள ஹதீஸின் மூலம் தெளிவாகின்றது. நாம் ஒவ்வொருவரும் குழந்தைப் பருவத்தைக் கடந்தே வந்திருக்கின்றோம். நாமும் நமது குழந்தைப்பருவத்தில் பல்வேறு இன்பதுன்பங்களைச் சந்தித்திருக்கின்றோம். சிலரது குழந்தைப் பருவம் இனிமையாக அமைந்திருக்கும். பலரது குழந்தைப்பருவம் மிக வேதனை தரக்கூடியதாக அமைந்திருக்கும். துன்பத்தையும் இன்பத்தையும் அல்லாஹ் தான் படைத்தான். அவனது நாட்டப்படியே உலகம் இயங்கிக் கொண்டிருக்கின்றது என்பது முஸ்லிம்களின் நம்பிக்கை. ஆனாலும் அவ்வின்ப துன்பங்களை நாம் நம்வாழ்வில் மாற்றிக் கொள்ளவும் அல்லாஹ் வழிகளை வைத்திருக்கின்றான். அதனால் தான் மனிதனுக்கு பகுத்தறிவு கொடுக்கப்பட்டுள்ளது. “உங்கள் கைகளால் செய்தவைகளன்றி வேறல்ல” என அல்குர்ஆன் கூறுகின்றது. உதாரணமாக, ஒரு மாங்கன்றை நடுகின்றீர்கள். அது கனி தரக்கூடியதா இல்லையா என்பதை உங்களால் முன்கூட்டி தீர்மானிக்க முடியாது. ஆனாலும் அதற்கு தினமும் நீரூற்றி, போதுமான பசளையிட்டு ஆடுமாடுகள் அதனை கடித்துவிடாதவாறு பாதுகாப்பு அரணிட்டு பராமரித்து வருகின்றீர்கள். நாளடைவில் அது நன்றாக வளர்ந்து சுவையான மாங்கனிகளைத் தரலாம் தராதும் போகலாம். ஆனால் உங்கள் நம்பிக்கை ஒருபோதும் வீண்போகாது.

இதுபோன்றுதான் நாம் ஒவ்வொரு விடயத்திலும் அறிவுபூர்வமாக நடந்து கொள்ளல் வேண்டும். குழந்தைகளும் மரக்கன்றுகளே. தளிர்விட்டு வளர்பவர்கள். அவர்களிடத்தே அன்பு செலுத்துவதும், அவர்களுக்கு உணவு, உடை, உறையுள் அளிப்பதும் ஒவ்வொரு பெற்றோரின் மீது கடமையாகும். சிலர் குழந்தைகளின் விடயத்தில் கரிசனையில்லாமல் நடந்து கொள்கின்றனர். நாளடையில் அக்குழந்தைகளும் அவர்களின் பெற்றோர் விடயத்திலும் அக்கறையின்றியே நடந்து கொள்வதுடன், பெற்றோரின் எண்ணங்களின்றியே வாழத் தொடங்கி விடுவர். நாம் இன்று நாளாந்த பத்திரிக்கைகளில் **"பச்சிளங்குழந்தையின் கழுத்தை நெரித்துக் கொன்று புதைத்த தாய்" "தந்தையை கத்தியால் குத்திக் கொன்ற மகன்" "தூங்கும் போது பெற்றோரின் தலையில் கல்லால் அடித்துக் கொன்ற மகள்"** எனும் செய்திகளை நாளாந்தம் காணக்கூடியதாகவுள்ளது. இவ்வாறான சம்பவங்கள் இடம்பெறுவதற்கான அடிப்படைக் காரணங்கள் என்ன? யாரைக் குற்றங்காண்பது பிள்ளைகளையா? பெற்றவர்களையா? கொலை என்பது சட்டத்தின் முன் குற்றமாகயிருப்பினும், அவை ஏன் நிகழ்கின்றன என்பது பற்றி எவ்வித ஆய்வுகளோ, சமூக விழிப்புணர்வு நிகழ்ச்சித்திட்டங்களோ நடைபெறுவது மிக மிகக் குறைவு. அரசும் இவ்வாறான சமூக செயற்பாட்டாளர்களை ஊக்குவிப்பதை விட்டு விட்டு வழக்குகளை நடாத்தி முடிப்பதிலும், தண்டனைகளை வழங்கிக் கொண்டிருப்பதிலுமே கவனஞ் செலுத்தி வருகின்றது என்பது மறைக்க முடியாத உண்மை.

ஆகவே, சமூக மாற்றத்திற்கான அடிப்படைத் தளமாக வீடுகளையும் பாடசாலைகளையுமே பெற்றோர் ஆசிரியர்களான நாம் பயன்படுத்த கடமைப்பட்டிருக்கின்றோம். இப்படிக் கூறியவுடன்

பிரம்பைக் கையிலெடுத்து அதிகாரம் செலுத்த வேண்டுமென்று நான் கூறவரவில்லை. மாறாக அன்பு செலுத்தி தேவையான போது மாத்திரம் கண்டித்து எமது குழந்தைகளை நாம் வளர்க்க வேண்டும். நான் வாழ்விலும் வாசிப்பிலும் பெற்ற அனுபவங்களினூடாகவே இந்நூலை எழுதியுள்ளேன். இந்நூல் எந்தவொரு நூலையும் தழுவி எழுதப்பட்டதல்ல என்பதுடன், தேவையான போது மாத்திரம் நான் வாசித்த எனது நினைவிலுள்ள விடயங்களை குறிப்பிட்டிருக்கின்றேன். அத்துடன், என்னை பெற்ற தாய் தந்தையருக்கும், இறையடியெய்திய எனது வளர்ப்புத் தாயான செய்யதும்மா அவர்களுக்கும், என் அன்பு மகள் தஸீன் றவ்தாவுக்கும், றம்சானாவுக்கும் என் சிறுபராயத்தில் என்மீது கரிசனைகாட்டி உதவிகள் பல செய்த எனது தந்தையின் குடும்பத்தினருக்கும், என்மீது எப்போதும் உண்மையான இதயசுத்தியுடன் நடந்துகொள்ளும் எனது அன்புக்கும் மரியாதைக்குமுரிய ஜாமிஆ நளீமிய்யாவின் முன்னாள் விரிவுரையாளரும் எழுத்தாளருமான ஏ.பீ.எம். இத்ரீஸ் சேர் அவர்களுக்கும், சிறுவயது முதல் என்மீது அன்பு செலுத்திவரும் பானு ராத்தாவுக்கும், இவர்களின் செல்லப்பிள்ளையும் குட்டி ஓவியருமான பிலால் அவர்களுக்கும் முன்னட்டையை சிறப்பாக வடிவமைத்துத் தந்த சகோதரர் றிஸ்வின் அவர்களுக்கும் எனது இதயபூர்வமான நன்றிகளை தெரிவித்து பிரார்த்தனை செய்கின்றேன். ''பாரகல்லாஹு லக்கும்''

எம்.கே. அல்தமிஷ்
ஓட்டமாவடி.
2018.06.25

## பொருளடக்கம்

## 01. குழந்தைகள் செல்வங்கள்

"அந்தத் தெருவில் குழந்தைகளில்லை நாமும் குழந்தைகளாவுமில்லை"

*கவிஞர் சந்திரபாலா*

*நூல்: மனிதர்களைப் புரிந்து கொண்டு செல்பவன்*



இப்றாஹீம் குழந்தையின்றி தவித்தபோது இறைவன் அவருக்கு தைரியமூட்டி அவரை உற்சாகப்படுத்தி முதிர்ந்த வயதிலும் ஒன்றன் பின் ஒன்றாக இஸ்மாயீல், இஸ்ஹாக் எனும் அழகிய இரு குழந்தைகளைக் கொடுத்தான். அதன் மூலம் அவரது சந்ததியினர் பல்கிப் பெருகினர். குழந்தைகள் இல்லாத உலகம் மயானத்தை விட மோசமானதாகும். அன்பை, மகிழ்ச்சியை வெளிப்படுத்தும் ஊடகம் அவர்கள். குழந்தைப் பாக்கியம் என்பர். பாக்கியம் என்றால் செல்வம். உண்மையில் அவர்கள் செல்வங்கள் தான்.

குழந்தைகளில் நல்லவர் கெட்டவர் என்ற பேதமில்லை. இயல்பிலேயே அவர்கள் நல்லவர்கள் தான். ‘‘எந்தக் குழந்தையும் நல்ல குழந்தை தான் மண்ணில் பிறக்கையிலே, அவர் நல்லவராவதும் தீயவராவதும் அன்னை வளர்ப்பினிலே…’’ என்பது இனிமையான பாடல் வரிகள்.

குடும்பத்தில் மகிழ்ச்சியையும் அருளையும் கொண்டு வருபவர்கள் குழந்தைகள். திருமணமான தம்பதியினர் தாமதிக்காது குழந்தையொன்றை பெற்றுக் கொள்ள வேண்டுமென்பது சமூகத்தினது எதிர்பார்ப்பும் சம்பிரதாயமுமாகும். அன்று குழந்தைகள் பெறுவதிலும் வளர்ப்பதிலும் இருந்த ஆசையும் ஆர்வமும் இன்று குறைந்து கொண்டே செல்கின்றன. அதற்குக் காரணம் நம்மிடத்தேயிருக்கும் பொருளாதாரக் கொள்கையும் இன்னபிற துணைக் காரணிகளும் தான். அல்லாஹ் தன் திருமறையில் தன்னை ‘‘உணவளிப்பவன்’’ என்கின்றான். அவன் மனிதர்களுக்கு மாத்திரமன்றி மண்ணுக்கடியில் வாழும் உயிரினங்களுக்கெல்லாம் உணவளிக்கின்றான். அவ்வாறிருக்கையில், பொருளாதாரத்தை காரணங்காட்டி ஒன்று அல்லது இரண்டு குழந்தைகளுடன் நிறுத்திக் கொள்வது எந்தவிதத்தில் நியாயம்?

இன்று குடும்பக்கட்டுப்பாட்டுக்கு ஆதாரமாக உலக சனத்தொகைப் பெருக்கம் காட்டப்படுகின்றது. அத்துடன் ஆபிரிக்க நாடுகளின் வறுமையும் சுட்டிக் காட்டப்படுகின்றது. இது உலக நியதிக்கு முரணானதொரு கோட்பாடாக அமைவதுடன், இதன் மூலம் ஒரு சமூகத்தின் பெருக்கமும் கட்டுப்படுத்தப்படுகின்றது.

இன்று குழந்தைகள் குழந்தைகளாகப் பார்க்கப்படுவதில்லை. வீட்டில், வீதியில் பாடசாலைகளில் என்று அவர்களைப் புரிந்து கொண்டு செயற்படும் தன்மை பெற்றோர் ஆசிரியரிடத்தே மிக மிகக் குறைந்தே காணப்படுகின்றது. அவர்களும் மனிதர்கள், உணர்வுள்ளவர்கள், உரிமை கொடுக்கப்பட்டு மதிக்கப்பட வேண்டியவர்கள் எனும் எண்ணம் நம்மிடயே குறைந்து காணப்படுவதே இதற்கான மூல காரணமாகும்.

செல்வம் என்பது பாதுகாக்கப்பட வேண்டியது. எக்காலமும் பலன் தரக்கூடியது. கல்வியை அழியாச் செல்வம் என்கின்றோம். குழந்தைகளும் ஒரு விதத்தில் அழியாச் செல்வங்கள் தான். காரணம் அவர்கள் இவ்வுலகின் மனித இனப்பெருக்கத்தின் அடிப்படையாக அமைவதுடன், தாய், தந்தை, ஆசிரியர் எனும் அந்தஸ்துக்களை தந்து நம்மை கௌரவத்துடன் சமூகத்தில் தலைநிமிரந்து வாழ வைக்கின்றனர். ஆகவே, அச்செல்வங்களை பாதுகாத்தலும் சிறந்த முறையில் வளர்த்தெடுத்தலும் நம்மீது கடமையாகும் என்பதை நினைவில் கொள்வோமாக !

## 02. குழந்தைகளுக்கு ஓய்வு தேவை



| **நேரம்** | | |
|---|---|---|
| காலை7.30மணி | வாப்பா: | மகளெங்க? |
| | உம்மா: | ஸ்கூல் போயிருக்கு |
| மதியம்2.30மணி | வாப்பா: | மகளெங்க? |
| | உம்மா: | மக்தப் போயிருக்கா |
| மாலை3.30மணி | வாப்பா: | மகளெங்க? |
| | உம்மா: | ஸ்கொலர்சிப் க்ளாஸ் |
| இரவு7.30 மணி | வாப்பா: | மகள் வந்தயா? |
| | உம்மா: | இன்னும் வரல்ல |
| இரவு8.30 மணி | வாப்பா: | மகளெங்க? |
| | உம்மா: | இப்பதான் சாப்பிட்டு தூங்குறா |

இது நூற்றுக்கு தொன்னூற்றைந்து வீதம் நம்மிடயே இடம்பெறும் உரையாடல். இங்கு உம்மாவும் வாப்பாவும் பேசிக் கொள்கின்றனர். உரையாடலில் குழந்தையைக் காணவில்லை. காரணம் உரையாடக்கூட நேரமில்லை. இன்று நம்மிடயே வெறிபிடித்திருக்கும் ஒரு பரீட்சை தான் ஐந்தாம் தர புலமைப்பரிசில் பரீட்சை. இது இன்று ஒரு தொற்று வியாதியாகவும் பிள்ளைகளை உளவியல் பாதிப்புக்குட்படுத்தும் நவீன கருவியாகவும் உருவாகியுள்ளது. பிள்ளைகள் என்போர் ரோபோக்கள் அல்லர். அவர்களும் நம்மைப் போன்ற மனிதர்களே. அவர்களுக்கும் நம்மைப் போன்ற உடலும், மூளையும் தான் இருக்கின்றதேயொழிய Super Power கொண்டவர்கள் அல்லர்.

ஓய்வு என்பது எல்லா உயிரினங்களுக்கும் தேவையான ஒன்று. நீங்கள் பூனை, நாய், கோழி போன்ற வளர்ப்புப் பிராணிகளை அவதானியுங்கள். அவை மனிதர்களைப் போல வெறித்தனமாக வேலை செய்வதில்லை. தூக்கத்தை வீணாக்குவதில்லை.

ஆனால், நாம் நமது பிள்ளைகளை Super Power கொண்டவர்களாகவே பார்க்கிறோம். எம்மை விடக் குறைந்தளவான ஓய்வு நேரத்தையே அவர்களுக்கு அனுமதிக்கின்றோம். நாம் நமது சந்தோசத்திற்காகவும், சமூகத்தில் கிடைக்கும் பகட்டு கௌரவத்திற்காகவும் அவர்களது ஓய்வு எனும் உரிமையை வழங்க மறுக்கிறோம். இதனால் குழந்தைகள் தங்களது இயல்பான ஆற்றல்களை இழக்க நேரிடுகின்றது. அவர்களது உடல் பலவீனமடைந்து மூளையின் இயங்கு திறன் சோர்வடைந்து உடல் உள ரீதியில் பாதிப்படைகின்றனர்.

நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் ஓய்வு பற்றிக் கூறும்போது,

**“ان لجسدك حق عليك”** “நீங்கள் உங்களது உடலுக்குச் செய்ய வேண்டிய கடமையுள்ளது.” என்றார்கள். நூல்: திர்மீதி.

உடல் என்பது நமக்களிக்கப்பட்ட அமானிதமாகும். அதை உரிய முறையில் பாவித்து மீண்டும் இறைவனிடம் கையளிப்பது நம்மீது கடமையாக்கப்பட்டுள்ளது. ஆனால், நம்முடைய அத்துமீறலால் குழந்தைகள் தங்களது உடலை இயந்திரம் போல பாவித்து தங்களின் ஓய்வு நேரங்களை அனுபவிக்க முடியாது தவிக்கின்றனர்.

படிக்க வேண்டிய வயதில் படிக்க வேண்டும் என்று நீங்கள் கூறுவதும் ஒரு வகையில் உண்மை என்றாலும், யதார்த்தத்தில் ஓய்வும் தேவை. இல்லையெனில், குழந்தைகள் நோயாளிகளாக மாறிவிடுவர். அதனால் தான் பாரதி ‘‘காலை எழுந்தவுடன் படிப்பு, பின்பு கனிவு கொடுக்கும் நல்ல பாட்டு, மாலை முழுதும் விளையாட்டு, என்று வழக்கப்படுத்திக் கொள்ளு பாப்பா’’ என்று பாடினான். ஆனால், இன்று மாலை முழுதும் டியூசன் என்றே குழந்தைகளை வழக்கப்படுத்தியிருக்கின்றோம். உலகில் சாதனை புரிந்த எந்தவொரு அறிஞனும், விஞ்ஞானியும், தலைவனும் முழுநேரக் கல்வியில் ஈடுபட்டதாகத் தெரியவில்லை. அதனால் தான் அவர்கள் வாழ்நாள் சாதனையாளர் ஆனார்கள். ஆகவே, குழந்தைகளை ஏட்டுக் கல்வியில் மட்டும் கவனஞ்செலுத்த வைக்காது, அவர்களை விளையாட்டு போன்ற விடயங்களிலும் ஈடுபடுத்தி தேவையானபோது ஓய்வையும் அளித்து நம் போன்ற மனிதர்களாக பார்ப்போமாக !

## 03. சுதந்திரமாக இயங்க விடுங்கள்



குழந்தைகளும் எம்மைப் போன்ற மனிதர்களே. அவர்களுக்கும் எண்ணங்கள் தோன்றும் கனவுகள் காண்பர். புதுமுயற்சிகளில் ஈடுபடுவர். விருப்பு வெறுப்புக்கள் கொண்டவர்கள். அன்பான வார்த்தைகளுக்கு கட்டுப்படுவர். குழந்தைகள் என்பதால் சுட்டித்தனம் கொண்டவர்கள்.

“அது உனக்கு வேண்டாம். அதைத் தொடாதே. அவளுடன் பேசாதே. இது தான் சிறந்த ஆடை” அவர்களது விருப்பு வெறுப்புக்கள் பற்றி சிறிதும் கவலைப்படாத பெற்றோரின் குரல்கள் இவை. தாம் தமது பிள்ளைகளின் நலத்தில் அக்கறை கொண்டவர்களாக இதன் மூலம் காட்ட எத்தனிக்கின்றனர். நீங்கள் உங்களது குழந்தைகள் மீது நூற்றுக்கு இருநூறு வீதம் அக்கறை கொண்டவர்கள் என்பதில் எள்ளளவும் சந்தேகமில்லை. ஆனால், எல்லா விடயங்களிலும் நீங்கள் மூக்கை நுழைப்பது

காலப்போக்கில் உங்கள் மீதான வெறுப்புக்கும் அவர்களின் தன்னம்பிக்கை இழப்புக்கும் காரணமாகிவிடும்.

நீங்கள் ‘‘தங்கமீன்’’ திரைப்படத்தை ஒருமுறை பார்த்திருந்தால் நான் சொல்வது உங்களுக்கு இலகுவில் புரிந்துவிடும். உண்மையில் காணொளி (Visual) மூலமான காட்சிகளே பெரும்பாலும் சமூக மாற்றத்திற்கு உந்து சக்தியாக அமைகின்றன. (மேலுள்ள படமும் தங்கமீனில் வரும் ஒரு காட்சியே)

திடீரென்று உங்கள் மனதில் ‘‘சந்தோஷ் சுப்ரமணியம்’’ திரைப்படக் காட்சிகள் கூட இப்போது வலம் வரலாம். அதில் தந்தையின் மிதமிஞ்சிய கட்டுப்பாடுகளால் மனம் குமுறும் மகன் திடீரென்று எதிராளியாக மாறும் தருணங்களை நினைத்துப் பாருங்கள்.

ஐநாவின் முதல் ஐந்து உறுப்புரைகள் மனித சுதந்திரம் பற்றித் தான் பேசுகின்றது. பிறப்பதற்கு, வாழ்வதற்கு, விரும்பிய சமயத்தை தேர்வு செய்வதற்கு என்று அதன் பட்டியல் நீண்டு செல்கின்றது. சுதந்திரத்தை அனைவரும் விரும்புவர். சுதந்திரம் பறிபோகும் போது போராட்டமும் வன்முறையும் உருவாகின்றது. குழந்தைகள் என்பதால் அவர்களது போராட்டம் அழுகையாகவும், முகத்தை சுழிப்பதாகவும், கோபப் பார்வையாகவும், பொருட்களை உடைத்தல் அல்லது வீசுதலாகவும், ஓரிடத்தில் சென்று ஒழிந்து கொள்வதாகவும், கெட்டவார்த்தைகளைக் கொண்டு திட்டுவதாகவும், மண்ணுக்குள் விழுந்து புரண்டு கால்களையும் கைகளையும் அடித்து வீறிட்டு கத்துவதாகவும் என்று பல்வேறு வடிவங்களை எடுக்கும். அத்தருணங்களில் பெற்றோர் கையினால் அல்லது பிரம்பினால் அடிப்பர் அல்லது பயங்காட்டுவர். உண்மையில் இவ்வாறான பெற்றோரின் செயற்பாடு பிள்ளையின்

உளநலத்தில் பாதிப்பை ஏற்படுத்துவதுடன் பெற்றோர் மீதான வெறுப்பு உருவாகவும் காரணமாகின்றது. (இதனால் தான் என்னவோ அதிகமான பிள்ளைகள் டீனேஜ் பருவத்தை எட்டியவுடன் எதிர்ப்பாலில் துணையொன்றை தேட ஆரம்பிக்கின்றனர்.)

நான் இப்போது உங்களுக்கு ஒரு பிரபலமான ஒருவரைப் பற்றி கூறப் போகின்றேன்.

பள்ளிப்பருவத்தில் தனது காற்சட்டைப் பைக்கற்றுள் பழைய ஆணிகளையும், குறடுகளையும் வைத்துக் கொண்டு திரிந்த அந்தச் சிறுவனுக்கு பள்ளிக்கூடம் என்றாலே வாந்தியெடுப்பான். தந்தைக்கோ இவனது போக்கு பிடிக்கவில்லை. தாயின் இறப்புக்குப் பின்னர் வீட்டை விட்டு வெளியேறி கடிகாரம் திருத்துமிடமொன்றில் வேலைக்குச் சேர்ந்தான். தான் போன போக்கிலேயே இன்று உலகையும் போக வைத்து இன்றுவரை வாழ்நாள் சாதனையார்களில் ஒருவனாக விளங்கும் அந்தச் சிறுவன் யார் தெரியுமா? அந்தச் சிறுவன் வேறுயாருமல்ல, உலகின் முன்னணி மோட்டார் கார் வகைகளில் ஒன்றான போர்ட் (Ford) காரின் கண்டுபிடிப்பாளரான ஹென்றி போர்ட் (Henry Ford) அவர்கள். தந்தை மரணிக்கும் வரை போர்ட்டின் எந்த விடயத்திலும் தந்தைக்கு உடன்பாடிருக்கவில்லை என்பது தான் உண்மை. இச்சுதந்திரத்தைப் பயன்படுத்தியே உலகை வென்றார். இன்று கிட்டத்தட்ட 164,000 பணியாளர்களுடன் 2010 ஆம் ஆண்டின் கணக்கெடுப்பின் படி 166 பில்லியன் அமெரிக்க டொலர்களை மொத்தச் சொத்தாகக் கொண்டிருக்கின்றது. (நன்றி: இணையதளம்). இப்படி எண்ணிலடங்கா சாதனையாளர்கள் இவ்வுலகில் வாழ்ந்துள்ளனர்.

ஆகவே, குழந்தைகளை இயங்கவிட்டு அவதானிப்பது தான் சிறந்த வெளியீடுகளை ஈட்டித் தரும். தேவைப்படும்போது மட்டும் அவர்களுக்கு அறிவுறுத்தல்களையும், ஆலோசனைகளையும் வழங்குவது பெற்றோரினதும் ஆசிரியரினதும் கடமை எனக் கொள்வீர் !

## 04. எண்ணங்களே ஓவியங்கள்



"அவன் எப்ப பார்த்தாலும் சுவர்ல எழுதுறதுதான் வேல. புதுசாத்தான் பெயின்ட் அடிச்ச" இது நம்மிடத்தே ஒலிக்கும் குரல்கள். சில சமயம் மனதுக்குள் மகிழ்ச்சியுடனும் பல சமயம் கோபமாகவும் மற்றவர்களின் கேள்விக்கும் பேச்சுக்கும் "ஆமா" போடும் விதமாகவும் நம்மில் அநேகமானோர் இருக்கின்றோம்.

நான் சிறுவயதில் ஹெலிகொப்டர்களையும், தென்னை மரங்களையும், இராணுவ வீரர்களையும், T56 ரக துப்பாக்கிகளையும், M9 பிஸ்டல்களையும் வரைய விரும்பினேன். காரணம் அது மட்டும் தான் எனக்கு பிடித்திருந்தது. அதற்குக் காரணம் நான் யுத்த காலத்தில் யுத்த பிரதேசத்தில் வாழ்ந்தவன் என்பதால். எனது சிறுவயதுப் பள்ளிக்கூடப் பருவத்தில் இராணுவ

வீரர்கள் பாடசாலைக்கு வந்து செல்வர். ஏன் வருகிறார்கள் என்பது பற்றி என்னைப் போன்ற சிறார்களுக்கு தெரியாது. ஆனால் என்னைப் போன்ற குழந்தைகளுக்கு அவர்கள் சூப்பர் ஹீரோக்களாகவே தென்பட்டனர். ஆகையால், இம்மனப்பதிவு சித்திரப் பாடத்தில் மட்டுமல்ல கழிவறைச் சுவர்களிலும் பிரதிபலிக்க ஆரம்பித்தன.

குழந்தைகள் தமது கடந்த காலத்தை விட நிகழ்காலத்தையும் எதிர்காலத்தையும் பற்றிய சிந்தனையுடனையே இருப்பர். தாம் சொற்களால் வர்ணிக்க முடியாத ஆசைகளையும் கனவுகளையும் தங்களின் குழந்தைத்தனமான ஓவியத்தின் மூலம் வெளிப்படுத்துவர். அவர்கள் வாழும் சூழல் அதற்கு முக்கிய பங்களிப்புச் செய்கின்றது. பென்சில்களுடனும் வர்ணங்களுடனும் அவர்கள் நம்மால் உணர முடியாத உலகில் உரையாடுகின்றனர். அது அவர்களுக்கு மகிழ்ச்சியைத் தருகின்றது.

நாம் நமது குழந்தைகள் நம்முடன் மட்டுமே அவர்களின் பிரச்சினைகளைப் பகிர்ந்து கொள்ள வேண்டுமென்று நினைக்கின்றோம். ஆனால், அவர்களின் எண்ணங்களை, பிரச்சினைகளை, விருப்பு வெறுப்புக்களை ஓவியங்கள் மூலம் வெளிப்படுத்துகின்றனர். நம்மை விட பென்சில்களும் வர்ணங்களுமே அவர்களை துலங்கச் செய்கின்றன.

சில பெற்றோர் பிள்ளைகள் முழுமூச்சில் ஓவியம் வரைவதை தடுக்க விளைகின்றனர். காரணம் ஏனைய பாடசாலைப் பாடங்களில் கவனத்தை சிதறவிட்டு விடுவான்/ள் எனும் காரணத்தால். இவ்வாறான ஆரோக்கியமற்ற எண்ணங்களால் தான் நமது குழந்தைகளின் இயல்பான ஆற்றல்கள் மழுங்கடிக்கப்பட்டு

விழுங்கவும் முடியாமல் உமிழவும் முடியாமல் திக்குமுக்காடுகின்றனர்.

நான் மறுபடியும் உங்களை சினிமாவுக்கே அழைத்துச் செல்கின்றேன். அது தான் ‘‘தாரே சமீன் பர்’’ இந்தித் திரைப்படவுலகில் மட்டுமல்ல உலகளவில் பேசப்பட்ட குழந்தை உளவியல்சார் திரைப்படம். ஓவியத்தின் பெறுமதியை உணர்த்தி எல்லாக் குழந்தைகளும் ஏதாவது ஓர் அதீத ஆற்றலைக் கொண்டிருக்கும் என்பதை பெற்றோருக்கும் ஆசிரியருக்கும் கோடிட்டுக் காட்டிய திரைப்படம். ஒரு தடவை பாருங்கள் உங்கள் கண்கள் கலங்கிவிடும் நீங்களும் குழந்தைகளின் உலகத்தினுள் சென்றுவிடுவீர்கள்.




பிலால் ஒரு குட்டி ஓவியன். வயதில் சிந்தனையில் எம்மை மிஞ்சிவிடுவான். பாடசாலையில் வகுப்பாசிரியர் அவனது திறமையை உணரவில்லை அல்லது உணருமளவுக்கு பயிற்றப்படவில்லை. ஓவியம் வரைவதில் மிகுந்த ஆர்வத்தை வெளிக் காட்டும் பிலாலின் ஓவியங்களைப் பார்த்தால் இச்சிறுவன் தான் வரைந்தானா? என்று ஆச்சரியப்பட்டு வாயை அகல திறப்பீர்கள். (நீங்கள் ஓவியங்களையும் குழந்தைகளையும்

மதிப்பவராகவும் இரசிப்பவராகவும் இருந்தால் மட்டும்) பிலாலால் வரையப்பட்ட ஓர் ஓவியத்தை கீழே பாருங்கள்.



ஓவியம் என்பது அழகியலில் ஓர் அங்கம். அல்லாஹ் அழகானவன் என்றும் அழகையே விரும்புவதாகவும் அல்குர்ஆனில் கூறுகின்றான். ஆகவே, அழகான எம் குழந்தைகள் அழகியலில் ஈடுபட உதவும் பெற்றோராக மாறுவோமாக !

## 05. ஆரோக்கியமான உணவுத் தேர்வு



இவ்வளவு நேரமும் குழந்தைகள் பக்கம் நின்ற நான் பொற்றோர் ஆசிரியர்களான உங்கள் பக்கமும் சற்று வந்தேதானே ஆக வேண்டும். உணவு என்பது மனிதனின் அத்தியவசியமான தேவைகளில் ஒன்று. உணவின்றி வாழ முடியாது. அவ்வாறு தான் நாம் படைக்கப்பட்டுள்ளோம். அல்லாஹ் அல்குர்ஆனில் ''உண்ணுங்கள் பருகுங்கள் வீண் விரயம் செய்யாதீர்கள்'' என்று கூறுகிறான். பிரதொரு இடத்தில் ''ஆகுமானதையே (ஹலால்) உண்ணுங்கள்'' என்கிறான். இன்று நாம் நவீனத்துவத்தின் அகோரப் பிடிக்குள் சிக்கித் தவித்துக் கொண்டிருக்கின்றோம். எதையும் ''Readymade'' ஆக பெறுவதிலேயே நம் கவனத்தைக் குவிக்கின்றோம். உணவாகட்டும் அல்லது உடையாகட்டும் ஏன் வீட்டைக் கூட ''Readymade'' ஆக வாங்கவே விரும்புகிறோம்.

இது சமகால வாழ்வியலில் மனிதனாக உருவாக்கிக் கொண்ட நிர்ப்பந்த நிலையேயாகும்.

நாம் ஆரோக்கியாக வாழ வைத்தியர்கள் முக்கியமாக இரண்டு ஆலோசனைகளைக் கூறுகின்றனர். ஒன்று, ஆரோக்கியமான உணவு. இரண்டு, நாளாந்த உடற்பயிற்சி. ஆனால், நாம் இவ்விரண்டு விடயங்களையும் கருத்திற் கொள்வதில்லை. காரணம் நமது பொடுபோக்குத்தனந்தான். சுமார் இருபது வருடங்களுக்கு முன்னர் நான் வளர்ந்த வீட்டின் முற்றத்தில் ''திராய்'' எனும் மூலிகைக் கொடி மணல் வாசலில் படர்ந்திருக்கும். கிணற்றடியில் வாழைமரங்கள் நான்கைந்து குலை போட்டிருக்கும். ''றாபுள்'' மரத்தில் பழங்கள் கனிந்து அப்பிரதேசம் முழுக்க மணம் வீசிக் கொண்டிருக்கும். திராயுடன் கீரிமீன் சேர்த்த சுண்டலும், மரவள்ளிக்கிழங்கும் காஞ்சறைச்சியும் சேர்த்து நைச்சாக்கிய கறியும் சாப்பிட்டால் ஒரு வாரத்திற்கு உடல் தெம்பாக இருக்கும். அது அன்றைய நிலை. இன்று காலையில் எழுந்தவுடன் பராட்டாவை நாடுகின்றோம். இரவில் பிரைட்ரைஸ் அல்லது கொத்து ரொட்டியை நாடுகின்றோம். இறுதியில் வைத்தியரை நோக்கி ஓடுகின்றோம். இது இன்றைய நிலை." ''ஹலால்'' (حلال) என்று முத்திரை குத்தப்பட்டால் மட்டும் போதாது. அது எமது உடலுக்கு தீங்கு விளைவிக்காததாகவும் இருக்க வேண்டும். நாம் சகோதர மதத்தவர்களின் கடைகளில் இறைச்சி உண்பதை விரும்புவதில்லை. ஆனால், நம்மவர் பழையதை புதிதாக பொரித்துத் தந்தால் சுவைத்துச் சுவைத்துச் சாப்பிடுகின்றோம்.

நமது குழந்தைகளையாவது சிறந்த உணவுப் பழக்கம் உள்ளவர்களாக மாற்ற வேண்டும். எவ்வாறான உணவு

வகைகளைத் தேர்வு செய்ய வேண்டும் என்பதை நாமே அவர்களுக்குச் சொல்லிக் கொடுக்க கடமைப்பட்டிருக்கின்றோம். நமது பண்பாட்டுக்கும் சூழலுக்கும் காலநிலைக்குமேற்ற உணவுகளைத் தெரிவு செய்தல் மிக அவசியம். உதாரணமாக, காலையில் தானியம் பழங்களைத் தெரிவு செய்தால் குழந்தைகள் ஆரோக்கியத்துடன் வளர்வார்கள். பகலிலும் இரவிலும் பண்பாட்டுடன் பாரம்பரிய உணவுகளை சமைத்துச் சாப்பிட்டால் நோய்களை குறைத்துக் கொள்ளலாம். முடிந்தளவு வீட்டில் சமைத்த உணவையே நீங்களும் உட்கொண்டு குழந்தைகளுக்கும் கொடுங்கள். வெளியில் வாங்குவதை முடிந்தளவு தவிர்த்துக் கொள்ளுங்கள். பிரயாணத்தின்போது உணவையும் நீரையும் எடுத்துச் செல்லுங்கள். குழந்தைகளையும் அவ்வாறே பழக்குங்கள்.

எமது மூதாதையர் பற்றி சற்றுச் சிந்தியுங்கள். அவர்கள் எத்தனை வருட காலம் வரை வாழ்ந்தார்கள்? அவர்களது ஆரோக்கியத்தை எவ்வாறு கடைப்பிடித்தனர்? அவர்களது உணவுப் பழக்கம் எவ்வாறிருந்தது? என்று இன்னும் பல கேள்விகளை எழுப்பி சிந்தியுங்கள். முடிந்தால் வீட்டுத்தோட்டம் செய்யுங்கள். குழந்தைகளுக்கும் கற்றுக் கொடுங்கள். அவர்கள் மிக விருப்பத்துடன் அதில் ஈடுபடுவார்கள். ''நோயற்ற வாழ்வே குறைவற்ற செல்வம்'' அதற்கு ஆரோக்கியமான உணவு மிக மிக அத்தியாவசியமாகும். மனதின் ஆரோக்கியம் உடலில் தங்கியுள்ளது. அத்துடன் பாரம்பரிய உணவின் முக்கியத்துவம் பற்றியும் குழந்தைகளுக்கு சொல்லிக் கொடுங்கள். அவர்களின் தலைமுறையாவது ஆரோக்கியமான உணவுத் தேர்வைக் கடைபிடிக்க வழிசெய்வோமாக !

## 06. ஏனைய குழந்தைகளுடன் ஒப்பிட்டுப் பேசாதீர்கள்



அல்லாஹ் ஒவ்வொரு மனிதனையும் தனித்துவமாகப் படைத்துள்ளான். ஒவ்வொரு குழந்தையும் இன்னொரு குழந்தையிலிருந்து வேறுபட்டிருக்கும். சில குழந்தைகள் அமைதியாக இருக்கும். சில குழந்தைகள் எப்போது பார்த்தாலும் துரு துருப்பாக அங்குமிங்கும் ஓடிக் கொண்டிருக்கும். சில குழந்தைகள் எப்போதும் வாய் ஓயாமல் வழ வழவெனப் பேசிக் கொண்டேயிருக்கும். சில குழந்தைகள் கேள்விக்கு மட்டும் பதிலளிக்கும். சில குழந்தைகள் எப்போது பார்த்தாலும் விளையாட்டில் ஈடுபட்டுக் கொண்டிருக்கும். சில குழந்தைகள் தனிமையையே விரும்பும். சில குழந்தைகள் கூட்டத்துடன்

கோவிந்தா போடும். (நீங்கள் குழந்தைப் பருவத்தில் இதில் எந்த ரகம்?)

ஒவ்வொரு குழந்தையும் இன்னொன்றிலிருந்து வேறுபட்டிருக்கும். ஏன் நீங்கள் கூட சிந்தனையில், பேச்சில், தொழிலில், உணவுப் பழக்கத்தில், தெரிவை மேற்கொள்வதில், உடையணிதலில், திறமையில், கல்வியில் மற்றவரை விட்டு வேறுபடவில்லையா? அதே போலத்தான் குழந்தைகளும்.

''பக்கத்து வீட்டு சுமையா என்னமாதிரிப் படிக்கிறாள். நீயும் தான் இருக்கிறியே. மூதேவி. எப்ப பார்த்தாலும் கார்ட்டூன் கார்ட்டூன் எண்டு'' இது அநேக தாய்மார் தமது பிள்ளைக்கு கல்வியின் முக்கியத்துவத்தை இன்னொரு குழந்தையினூடாக பறைசாற்றுவதாகும். உண்மையில் இவ்வாறான சொல்லாடல்கள் பிள்ளையின் மனதில் **'தான்'** பற்றிய நம்பிக்கையீனத்தை வளரச் செய்து தனது இயல்பான தனித்துவமான திறமைகளை கைவிட்டு மற்றொரு குழந்தையைப் பின்பற்றும் நடிகர்களாகவே மாற்றிவிடும்.

உங்கள் கணவனோ மனைவியோ உங்களை இன்னொரு ஆணுடன் அல்லது பெண்ணுடன் ஒப்பிட்டு பேசினால் உங்களுக்கு எப்படி இருக்கும்? உங்கள் துணைவருடன் புன்னகைப்பீர்களா? நிச்சயமாக இல்லை. அதே போலத்தான் குழந்தைகளும். ஒவ்வொரு குழந்தையின் ஆற்றலும் இன்னொரு குழந்தையின் ஆற்றலிலிருந்து வேறுபட்டிருக்கும்.

நான் உங்களுக்கு சிறந்த உதாரணமொன்றை கூறப் போகிறேன்.

உலகின் தலைசிறந்த அணு விஞ்ஞானிகளில் ஒருவரும் இந்தியாவின் ஜனாதிபதியுமாக பதவி வகித்த அப்துல் கலாம்

பற்றித் தெரியும் தானே! அவ்வாறெனில் அவரது சகோதரன் பற்றியும் கேள்விப்பட்டிருப்பீர்கள் இல்லையா? அவரது பெயர் முகம்மது முத்து மீராலெப்பை மரைக்கார் (வயது 99). பழைய குடைகளைத் திருத்தும் சிறியதொரு கடையில் சாதாரண மனிதராக வாழ்கின்றார். ஆனால், தம்பி அப்துல் கலாம் விஞ்ஞானியும் ஜனாதிபதியும் அல்லவா. இருவருக்கும் ஒரு தாய் தந்தையர் தான். ஒரே வீடு. ஒரே கல்வி. ஒரே மூளை. ஆனால் தம்பி விஞ்ஞானி. அண்ணன் குடைஞானி.

சில பெற்றோர் தன் பிள்ளையும் அடுத்த பிள்ளையைப் போல படிக்க வேண்டும். பரீட்சையில் முதல் மதிப்பெண் வாங்க வேண்டும். ஸ்கொலர்சிப்பில் பாஸ் பண்ண வேண்டும் என்று இன்னோரன்ன கனவு காண்கின்றனர். கனவு காண்பதில் தப்பில்லை. ஆனால், முழு மூச்சுடன் செயற்படுவது தான் தவறு. உங்கள் குழந்தையை அவர்களின் ஆற்றலுக்கேற்ப தனித்துவமாக வளர்த்தெடுங்கள். எல்லோரும் மருத்துவர்களாகவும், பொறியிலாளர்களாகவும், கணக்காளர்களாகவும் வருவதில்லை. அவர்களின் உண்மையான திறமைகளை அவர்களை சுயமாக இயங்கவிட்டு அவதானித்து இனங் காணுங்கள்.

இதில் ஆசிரியர்களின் பங்களிப்பு முக்கியத்துவமாகின்றது. ஆனால், இன்று அநேகமான ஆசிரியர்கள் எல்லாக் குழந்தைகளையும் ஒரே பானைக்குள் வைத்து மூடப் பார்க்கின்றனர். ஒரே கோணத்தில் நோக்குகின்றனர். அரைத்த மாவையே திரும்பத் திரும்ப அரைக்கின்றனர். இதற்கு நமது கல்வி முறையும் பகட்டுக் கௌரவத்துக்குள் அகப்பட்டிருப்பதும் முக்கிய காரணங்களாகின்றன.

உங்கள் குழந்தைகள் எதிர்காலத்தில் சிறந்ததோர் ஓவியனாக, ஒரு விஞ்ஞானியாக, ஒரு கவிஞனாக, ஒரு சமூகத் தலைவனாக, ஒரு வரலாற்றாசிரியனாக, ஒரு விமான ஓட்டுனராக அல்லது கப்பற் தலைவனாகக் கூட வரலாம். அதற்கு நீங்கள் வழியைத் திறந்து கொடுக்கும் மனதை பெற்றிட அல்லாஹ் அருள் புரிவானாக !

## 07. அவர்களுடன் சேர்ந்து விளையாடுங்கள்



விளையாட்டு என்றாலே குழந்தைகளுக்கு ஒரே குஷி தான். மகிழ்ச்சியின் ஓர் அங்கம் விளையாட்டு. பெருநாள் தினங்களில் பிரத்தியேகமான விளையாட்டுப் போட்டிகளை நாடாத்தி பரிசில்களை வழங்குவது அன்றிருந்த வழக்கம். இன்று சிக்கன் பிரியாணி சஹனை ஓடர் பண்ணி சாப்பிட்டுத் தூங்குவது பழக்கம். எது எப்படியிருப்பினும், விளையாட்டை சிறியோர் முதல் பெரியவர் வரை விரும்புவர். காரணம், நான் குறிப்பிட்டது போல் மகிழ்ச்சியின் ஓர் அங்கம் தான் விளையாட்டு.

குழந்தைகளின் விளையாட்டு குழந்தைத்தனமாகவிருப்பதால் அநேகமானோர் அவர்களுடன் சேரந்து விளையாட கூச்சப்படுகின்றனர். மற்றவர் பார்த்தால் என்ன நினைப்பார்கள் அல்லது இதில் எவ்வித பிரயோசனமுமில்லை எனும் உளப்பாங்குகளே இதற்கு பிரதான காரணம். குழந்தைகள் சத்தமிட்டு விளையாடும்போது ‘‘ஏய் சத்தம் போடாம இரு,

தள்ளிப்போய் விளையாடு, புத்தகத்தை எடுத்து ஹோம்வேர்க் செய்'' என்றெல்லாம் நாம் அவர்களை நமது அதிகாரத்தின் மூலம் அவர்களது சாதாரண விளையாட்டு உரிமையைக் கூட பறித்து விடுகின்றோம். எதற்காக நாம் இவ்வாறு செய்ய வேண்டும்? அவர்கள் உங்கள் குழந்தைகள். உங்களது வீட்டில், முற்றத்தில், வகுப்பறையில் விளையாடாமல் எங்கு சென்று விளையாடுவார்கள்? பதிலுக்கு நீங்களும் அவர்களுடன் சேர்ந்து விளையாடுங்கள். அப்போது அவர்கள் உங்கள் மீது வைத்திருக்கும் அன்பும், மரியாதையும், நம்பிக்கையும் அதிகரிக்கும். உங்களுடன் மனந்திறந்து பேசுவார்கள். உண்மையைச் சொல்வார்கள். விளையாட்டின் மூலம் பல விடயங்களை நாமும் கற்றுக் கொள்வதுடன் நம் குழந்தைகளுக்கும் கற்றுக் கொடுக்கலாம். இதற்கு நான் ஓர் எளிய சம்பவத்தை உங்களுக்கு கூறுகின்றேன்.

எனது மகளுக்கு ஐந்து வயதிருக்கும். முன்பள்ளிப்பருவம். நல்ல கெட்டிக்காரி. ஒன்றை விரைவாக கிரகித்துக் கொள்வதிலும், நீண்ட நாள் ஞாபகம் வைத்துக் கொள்வதிலும் மிகுந்த திறமையுடையவள். ஒரு நாள் இரவு 7 மணியிருக்கும். நானும் மகளும் பேசிக் கொண்டிருந்தோம். நானொரு தந்தையாக இருப்பினும் எனது மகளுக்கு நல்ல நண்பன். திடீரென்று எனக்கொரு எண்ணம் உதித்தது. மகளுக்கு இத்தாலி மொழியைக் கற்பித்தால் என்னவென்று. களத்தில் இறங்கினேன் ஒரு பரிசோதனைக்காக. மகளிடம் சொன்னேன் ''தஸீன் நீங்க போய் ஒரு புத்தகம், ஒரு பேனை, ஒரு பென்சில், ஒரு டவல், ஒரு டூத்ப்ரஸ், ஒரு டூத்பேஸ்ட் எடுத்து வாங்க'' என்று. வேலை செய்வதில் அவளுக்கு அலாதிப் பிரியம். ஐந்தே நிமிடங்களில் பொருட்களைக் கொண்டு வந்தாள். தரையில் வரிசையாக

வைத்தேன். இப்போது நான் இரு பொருட்களின் பெயர்களை மட்டும் இத்தாலியில் சொல்லிக் கொடுத்து அதை மாற்றி மாற்றிச் சொல்லும் போது சரியாக எடுக்க வேண்டும் என்றேன். இப்படியாக ஆறு பொருட்களினதும் பெயர்களை சொல்லிக் கொடுத்தேன். பின்னர், அவளை ஆசிரியையாக மாற்றி நான் ஒரு முன்பள்ளி மாணவனானேன். இப்போது அவள் கூறும்போது நான் சரியாக எடுக்க வேண்டும். சில நேரங்களில் வேண்டுமென்றே பிழையாக எடுத்தேன். தனது கையிலிருந்த பிரம்பினால் மெதுவாக ஓர் அடி விட்டாள். இக்கணம் கூட அச்சம்பவம் எனக்கு மகிழ்ச்சியூட்டுறது.

இவ்வாறான கற்பித்தல் முறைகளை பெற்றோரும் ஆசிரியரும் கடைபிடிக்கும் போது பிள்ளை கற்றலை மகிழ்ச்சியுடன் ஏற்றுக் கொள்ளும். அத்துடன், விளையாட்டின் மூலம் அவர்களின் உரையாடல் திறனும், ஆளுமையும் அதிகரிக்கின்றது. உடலுக்கும் உள்ளத்திற்கும் சிறந்ததொரு பயிற்சியாகவிருப்பதுடன், நாடகங்களை தயார்படுத்தும் ஒரு சந்தர்ப்பமாகவும் அமைகின்றது. நீங்கள் தொலைக்காட்சியில் ஒளிபரப்பப்படும் சீரியல்களை கொஞ்சம் குறைத்து விட்டு உங்களது குழந்தைகளுடன் சேர்ந்து அவர்களின் விளையாட்டை நாடகமாகப் பாருங்கள். நீங்களும் புத்துணர்வடைவதுடன், குழந்தைகளும் மிகுந்த மகிழ்ச்சியடைவர். அதற்கு இறைவன் அருள் புரிவானாக !

## 08. குடும்பத்தில் ஓர் அங்கத்தவர்



“நாங்க முக்கியமான விசயம் பேசப் போறம். மகன் நீங்க அங்கால போய் சத்தம் போடாம விளையாடுங்க” என்று சொன்னவுடன் குழந்தைகளும் அவ்வாறே தங்களது விளையாட்டுப் பொருட்களை அள்ளிக் கொண்டு மற்றதொரு அறைக்கோ அல்லது வெளியிலோ சென்று விடுவர். ஆனால் தாயும் தந்தையும் என்ன பேசப் போகின்றார்கள் என்பதில் குழந்தைகளின் மனதுக்குள் புதிர்க் கணக்குகள். சில குழந்தைகள் தமது காதைக் கூர்மையாக்கி ஒட்டுக் கேட்கும்.

எமது குழந்தைகளுக்கு நாம் பேசும் விடயங்கள் புரியாது என்று நினைக்கிறோம். நம்மை விட அவர்கள் அறிவில் குறைந்தவர்கள், புத்திபுடிபடாத வயதினர் என்றெல்லாம் கற்பனை செய்கின்றோம்.

உண்மையில் அறிவென்பது உடலையும் உயரத்தையும் வைத்து தீர்மானிக்க முடியாதவொன்றாகும்.

உளவியலில் உளவயது என்போம். அதாவது, ஒரு குழந்தையின் (அதன் பிறப்பிலிருந்து நாம் கணக்கிடும்) வெளித்தோற்ற வயது 2 ஆக இருக்கும்போது உளவயது 4 ஆகவும் இருக்கலாம். அதாவது, 2 வயதுக் குழந்தை 4 வயதுக் குழந்தையின் அறிவு மட்டத்தில் இருக்கும். அதேபோல 8 வயதுக் குழந்தை 5 வயதுக் குழந்தையின் அறிவு மட்டத்தில் இருக்கலாம். இதனை நமது பாஷையில் ‘‘மந்த புத்தி’’ என்போம். உண்மையில் இவ்வாறான சொற்பிரயோகங்களை பாவித்து கூப்பிடுவதென்பது ஆரோக்கியமான உரையாடல் அல்ல. சில பெற்றோரும் ஆசிரியரும் இயல்பான தங்களது குழந்தைகளைக் கூட இவ்வாறு கூறி திட்டுவதைக் கண்டிருக்கின்றேன்.

7 வயதுக் குழந்தை அல்குர்ஆனை முழுமையாக மனனமிட்டது. 15 வயதாகியும் இன்னும் அவனால் 5 ஜூஸ்உக்களைக் கூட மனனமிட முடியவில்லை என்கின்றோம். காரணம், அக்குழந்தைகளின் உள வயதும் நினைவாற்றலுமே காரணம். ஆகவே, நாம் எம் குழந்தைகளின் புரியும் ஆற்றலை முற்றுமுழுதாக மட்டிட முடியாது. நாம் எல்லா விடயங்களையும் குழந்தைகளிடத்தே கூற வேண்டும் என்று அவசியமில்லை. அதேநேரம் எல்லாவற்றையும் மறைக்க வேண்டும் என்று கருதலாகாது.

குழந்தைகளை குடும்ப அங்கத்தவர்களாகவே கருத வேண்டும். அவர்கள் அடிமைகள் அல்லர். நாம் பல விடயங்களை அவர்களிடத்தே கலந்துரையாடலாம். உதாரணமாக:- புதிதாக

வீடொன்றை நிர்மாணிக்க திட்டமிடும்போது, வீட்டுக்கு வர்ணம் தீட்ட தயாராகும்போது, வீட்டை அலங்கரிக்கும்போது, சமையலில் ஈடுபடும்போது, உடைகளைத் தெரிவு செய்யும்போது, பொதுவான விடயங்கள் பற்றி கலந்துரையாடும்போது, வீட்டை சுத்தம் செய்யும்போது, கடைத்தெருவுக்கு செல்கின்றபோது, என்று அவர்களையும் இணைத்து செயற்படுங்கள். அதுவே அவர்களுக்கு மிகுந்த மகிழ்ச்சியை அளிப்பதுடன் அவர்களும் பிற குழந்தைகளுடன் சமத்துவமாக பழகுவர்.

நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் ஸுஜூதில் இருக்கும்போது பேரர்களான ஹசன் மற்றும் ஹுசைன் நபியவர்களின் தோள் மீது ஏறிக் கொள்வர். அப்போது நபியவர்கள் தனது பேரர்கள் இறங்கும் வரை ஸுஜூதிலேயே நீண்ட நேரம் இருப்பார்கள். இதுவே சமத்துவமாகும். இன்றைய குழந்தைகள் தான் நாளைய தலைவர்கள். பெற்றோர் ஆசிரியருடன் ஒன்றாக இணைந்து செயற்படவே அவர்கள் விரும்புகின்றனர். தங்களையும் ஓர் அங்கத்தவராக மதிக்க வேண்டுமென்பதே அவர்களின் விருப்பம். அதை நாமும் மதித்து வீட்டிலும் வகுப்பறையிலும் அவர்களுக்கான சமத்துவத்தை வழங்குவோமாக !

## 09. விரும்பியதைச் செய்யும் உரிமை



**சம்பவம் 01:**

“உங்களது மகனின் காற்சட்டை பொக்கற்றில் எப்போதும் ஆணியும் பழைய தகட்டுப் பொருட்களுமே உள்ளன. எப்போது பார்த்தாலும் அவன் எதையாவது கழற்றுவதும் பூட்டுவதுமாகவே இருக்கின்றான்”

**சம்பவம் 02:**

“பொறு அப்பாவைக் கூப்பிடுகிறேன். மரியாதையாக அந்த ஒகனை வைத்து விடு”

**முதலாவது சம்பவத்தில் வரும் அந்தச் சிறுவன் யார் தெரியுமா?**



உலகின் அதி விலையுயர்ந்த மோட்டார் கார் ரகங்களின் ஒன்றான "FORD" காரின் கண்டுபிடிப்பாளரான ஹென்றி போர்ட் பற்றியது. சிறுவயதில் கடிகாரங்களை கழற்றுவதும் இயங்காத கடிகாரங்களை இயங்கச் செய்வதும் தான் அவருக்குப் பிடித்தமான கல்வி. போர்ட்டின் அம்மா தான் அவருக்கு உறுதுணை. அப்பாவோ நிலவுடமை பொருளாதாரக் கொள்கையாளர் என்பதால் அவர் இறக்கும் வரை போர்ட்டை அவருக்குப் பிடிக்காது. காரணம் அப்பாவுக்கு பிடிக்காத செயலை போர்ட் செய்தார் என்பது தான் ஒரே காரணம். அதனால் அம்மா இறந்தவுடன் கட்டிளமைப் பருவத்திலேயே வீட்டை விட்டு வெளியேறி தான் விரும்பியது போல் கடிகாரம் திருத்துமொரு கடையில் வேலைக்குச் சேர்ந்து அதன் மூலம் இயந்திரவியலில் தேர்ச்சி பெற்று தன் பெயரிலேயே காரொன்றை உருவாக்கும் நிலைக்கு உயர்ந்தவர். காரணம், அவர் விரும்பியதைச் செய்தார்.

**இரண்டாவது சம்பவத்தில் வரும் அந்தச் சிறுவன் யார் தெரியுமா?**





இன்று உலகளவில் கலக்கிக் கொண்டிருப்பவரும், இரண்டு ஒஸ்கார் விருதுகளை ஒரே தடவையில் பெற்று இந்திய மண்ணுக்கே பெருமை சேர்த்த ஏ.ஆர். ரகுமான். சிறுவயதில் தந்தையின் இசைக் கருவிகளை கழற்றும் போது அவரது அக்காவின் குரல் தான் சம்பவத்தில் வருவது. உடனேயே அக்கருவியைக் கழற்றியவாறே பூட்டி விடுவார். இங்கு அக்கா தனது தம்பி இந்தளவு பிரபலம் அடைவான் என்று நினைத்திருப்பாரா? அப்படி நினைத்திருந்தால் இவ்வாறு பயங்காட்டியிருக்கமாட்டார்.

ஆகவே, குழந்தைகள் எதை விரும்பிச் செய்கின்றார்களோ அதை ஊக்கப்படுத்துங்கள். கல்வியாகட்டும் அல்லது புத்தாக்க கண்டுபிடிப்பாகட்டும் எதுவாக இருப்பினும் குழந்தை விரும்பியதை தெரிவு செய்யும் சுதந்திரத்தைக் கொடுக்க வேண்டும். கடவுள் ஒவ்வொரு மனிதனுக்கும் வெவ்வேறு விருப்பங்களைக் கொடுத்துள்ளதுடன் அதனை தெரிவு செய்யும் ஆற்றலையும் வழங்கியுள்ளான். ஒன்று நமக்குப் பிடிக்கும். அது மற்றவருக்குப் பிடிக்காது. ஆடைகளை தெரிவு செய்யும் விடயத்தில் அம்மாவுக்கும் குழந்தைக்கும் எப்போதும் ஒரு முரண்பாடு இருந்தே

தீரும். தாய் ஒரு ஆடையை அணியச் சொன்னால் குழந்தை ஒன்றை தெரிவு செய்யும். உண்மையில் பெற்றோர் நீங்கள் உங்கள் குழந்தையின் நலத்தில் அக்கறை கொண்டவர் என்பதில் துளியளவு கூட சந்தேகமில்லை. ஆனால், விரும்பியதைத் தெரிவு செய்யும் உரிமை உங்கள் குழந்தைகளுக்குமுண்டு என்பதை மறந்து விடாதீர்கள். குழந்தைகள் எப்போதும் அடம்பிடிப்பார்கள். இது தான் வேண்டுமென்பார்கள். கடைத்தெருவுக்கு கூட்டிச் சென்றாலும் நீங்கள் ஒன்றை தெரிவு செய்கையில் அவர்களின் தெரிவு வேறொன்றாக இருக்கும். இப்போது உங்களுக்கு மிகுந்த கோபம் ஏற்படும். காரணம்

1. **உங்களுக்கு அது பிடிக்கவில்லை**

2. **உங்களின் தெரிவை நிராகரித்தமை**

3. **உங்களிடம் போதிய பணமின்மை**

இவை தவிர்ந்த வேறு காரணங்களும் இருக்கலாம். இச்சந்தர்ப்பத்தில் நீங்கள் உங்கள் குழந்தைகளுக்கு ஏசவோ, அடிக்கவோ கூடாது. மாறாக அவர்களுக்கு புரியும்படியாக எடுத்துச் சொல்லுங்கள். முடியுமானால் வாங்கிக் கொடுங்கள். அவர்கள் விரும்பியதைக் கொடுப்பதே அவர்களுக்கு மகிழ்ச்சியை அளிக்கும். நீங்கள் வன்முறையாக அளிப்பது பரிசல்ல. நீங்கள் அவர்கள் விரும்பியதைச் செய்தால் அவர்கள் உங்களுக்கு பிடித்தமானதைச் செய்வார்கள். அன்பின் மூலம் தான் எதையும் சாதிக்கலாம். அதிகாரம் வன்முறையையே தோற்றுவிக்கும். குழந்தைகளின் மனசு கள்ளங்கபடமற்றது. மலர் போன்றது. சிறிது ஏமாற்றத்தையும் தாங்க முடியாதவர்கள். ஒரு மரக் கொப்பின் உச்சி போன்றது. எளிதாக முறிந்து விடும். நீங்கள் உங்கள் குழந்தைகளின் மனதை

காயப்படுத்தாதீர்கள். விளைவுகளை நீங்கள் தான் அனுபவிக்க நேரிடும். விரும்பியதைத் தேர்வு செய்யும் சுதந்திரத்தை அளித்து மகிழ்ச்சியை பரிசாக கொடுப்போமாக !

## 10. கற்றுக் கொள்ளுங்கள் கற்றுக் கொடுங்கள்



**"எரியும் மெழுகு வர்த்தி தான் ஏனைய மெழுகுவர்த்திகளை எரிய வைக்கும்" - ரவீந்திரநாத் தாகூர்.**

இது கல்விக்கும் பொருந்தும் ஏனைய பிற விடயங்களுக்கும் பொருந்தும். ஆசிரியருக்கும் பொருந்தும் பெற்றோருக்கும் பொருந்தும். நம்மிடத்தே இருப்பதை கொடுப்பது தர்மமாகும். பணமாகட்டும், பொருளாகட்டும் ஏன் கல்வியாகட்டும் தூய்மையான மனதுடன் அளிப்பதே தர்மமாகும்.

"ஓர் எழுத்து கற்றுத் தந்திருப்பினும் அவர் என் ஆசானே" என்றார் அலி (றழி) அவர்கள். கற்றுக் கொடுப்பதால் நாம் எதிலும் குறைந்து விட மாட்டோம். பிறர் அறியாதவற்றை கற்றுக்

கொடுப்பது தான் உண்மையான கல்வி. அதில் தான் பலன் கிடைக்கும்.

குழந்தைகளின் “Roll Models” அவர்களின் பெற்றோர்களே. குறிப்பாக அதிக விடயங்களில் தந்தையைப் பின்பற்றுவதிலேயே மும்முரமாக இருப்பர். தந்தை பத்திரிகைகள், நூல்களை வாசிக்கும் பழக்கமுடையவராயிருந்தால், குழந்தையும் அவ்வாறே இருக்கும். தாய் பயிர்களுக்கு தண்ணீர் ஊற்றுவதைக் கண்டால், குழந்தையும் அதையே செய்யத் தொடங்கும். போலச் செய்தல் என்பது குழந்தைகளிடமிருக்கும் தனித்துவமான பண்பாகும். குழந்தைகள் எதையும் உன்னிப்பாக அவதானிப்பர். அவர்களுக்கு உறிஞ்சிக் கொள்ளும் திறன் (Grasping Skill) வளர்ந்தவர்களை விட அதிகம். எந்நேரமும் நாம் அறிந்தோ அறியாமலோ அவர்கள் எம்மை அவதானித்துக் கொண்டிருக்கின்றனர். தூங்குவதில் கூட சில குழந்தைகள் பொற்றோரைப் பின்பற்றும். நீங்கள் செய்யும் தவறுகளையே அவர்களும் செய்ய முனைவர். நாம் பெரியவர் என்பதற்காக அவர்களில் மட்டும் குறைபிடிப்பதும் அச்சுறுத்துவதும் அழகல்ல. மாறாக நாம் நமது பண்புகளை சிறந்த முறையில் சீர்படுத்தி அதனை அவர்களுக்கும் கற்றுக் கொடுப்பது தான் சிறப்பாகும்.

குழந்தைகள் எம்மிடத்தே பல கேள்விகளை துருவித் துருவிக் கேட்பர். சில கேள்விகள் எமக்கு அலுப்பூட்டுவதாகவும், வெறுப்பூட்டுவதாகவும், தெரிந்ததாகவும் இருக்கலாம். அவற்றையெல்லாம் பொருட்படுத்தாது நாம் உரிய முறையில் மென்மையாக பதிலளிக்க வேண்டும். எம்மால் முடிந்தளவு நல்ல பழக்க வழக்கங்களை சிறுவயது முதலே கற்றுக் கொடுக்க

வேண்டும். உதாரணமாக சில குழந்தைகள் பொது இடங்களென்றும் பாராது மூக்குத் துவாரத்தினுள் விரலை விட்டு நோன்டிக் கொண்டிருக்கும். (சில பெரியவர்களும் தான்) இதனைக் கண்டவுடன் அடிக்காது மாற்றீடாக கைக்குட்டையொன்றை வழங்கலாம். அத்துடன் அன்பாக சொல்லிக் கொடுக்கவும் வேண்டும். எந்தவொரு விடயத்தையும் நாம் முதலில் பெற்றோர் ஆசிரியர்களான நாம் கற்றுக் கொள்ள வேண்டும். இன்று ஒழுக்க விடயங்களில் பெரியவர்களிடத்தே பல குறைபாடுகள் காணப்படுகின்றன. சிலபொழுது நாம் குழந்தைகளிடத்தேயிருக்கும் பல விடயங்களைக் கற்றுக் கொள்ளும் தருணங்களும் அமைந்து விடுகின்றன. உதாரணமாக தெருவோரங்களில் யாசிப்பவர்களைக் கண்டால் அவர்களை ஆச்சரியமாகவும் பரிதாபத்துடனும் பார்க்கும். அவர்களுக்கு உதவ முயற்சிக்கும். ஆனால், பெரியவர்கள் கண்டும் காணாதது போல சென்று விடுவர். யாசிக்கும் குழந்தைகளைக் கண்டால் ஏதாவதொன்றைக் கொடுக்க முயற்சிக்கும். ஆனால், பெரியவர்களான நம்மில் அதிகமானோர் அவர்களை இழிவாக பார்க்கின்றோம்.

நம்மிடத்தே இருக்கும் தீய பண்புகளைக் களைவதுடன் நற்பண்புகளை அவர்களுக்கு கற்றுக் கொடுக்க வேண்டும். கல்வியுடன் கூடிய சிறந்த பண்புகள் தான் உங்கள் குழந்தையின் எதிர்காலத்தை சிறப்படையச் செய்ய வல்லன என்பதை விளங்குவோமாக !

## 11. குழந்தைகளின் முன்னிலையில் பெற்றோர் முரண்பாடு வேண்டாம்



| | | |
|---|---|---|
| மனைவி | : | உங்களுக்கு வேற வேல இல்ல. |
| கணவன் | : | கொஞ்சம் வாய மூடுறியா? |
| மனைவி | : | நான் ஏன் வாய மூடணும்? |
| **குழந்தை** | **:** | **உம்மா ! பசிக்குது.** |
| மனைவி | : | போடி அங்கால. இரிக்கிற பிரச்சினக்கி இதுவும் வந்து புறந்திருக்கி. சனியன். |
| கணவன் | : | ஏன்டி புள்ளய திட்றாய்? |

*(தொடர்கின்றது சண்டை முதலாம் கலிமா முதல் ஐந்தாம் கலிமா வரை)*

இது அநேகமான வீடுகளில் இடம்பெறும் கணவன் மனைவி சண்டை. தங்களுக்குள் இருக்கும் முரண்பாட்டை கணவனோ மனைவியோ அச்சமயம் குழந்தையின் மீதும் காட்டத் துவங்குகின்றனர். இதனால் குழந்தையும் யார் பக்கம் நிற்பதென்று மிகுந்த பதற்றத்துடன் நிற்பதுடன் சில சமயம் அழுது கொண்டு பக்கத்து வீட்டுக்கு ஓழுவதும் வழக்கம்.

எனக்கும் என்மனைவிக்கும் பல தடவைகள் பல விடயங்களில் முரண்பாடுகள் வந்திருக்கின்றன. ஏன் ஆளையால் அடித்துக் கொண்டும் கூட சண்டையிட்டுருக்கின்றோம். அச்சமயம் என் மகள் அழுது கொண்டு உம்மம்மாவின் வீட்டுக்கு ஓடிவிடுவாள். அல்லது எங்களை சண்டை பிடிக்க வேண்டாம் என்று கெஞ்சுவாள். இது அவளின் இயல்பு. ஒரு தடவை எனது முட்டாள்தனமான முன்கோபத்தினால் அவளது கன்னத்தில் ஓர் அறை விட்டேன். அதனால் வீரிட்டழுதாள். இப்போது நினைத்தாலும் என் இரு கண்களும் கலங்கி விடுகின்றன. **அதற்காக நான் இத்தருணத்தில் எனது மகளிடம் பகிரங்கமாக மன்னிப்புக் கேட்டுக் கொள்கின்றேன். "தஸீன் குட்டி, என்னை மன்னித்து விடும்மா. அபீ வேணும்னு செய்யலடா. கோபத்தினால செஞ்சிட்டன். அல்லாஹ்வுக்காக மன்னித்து விடுங்கடி"**

குழந்தைகளின் முன்னிலையில் நாம் முரண்பட்டுக் கொள்வதால், அவர்கள் மன உளைச்சலுக்கு உள்ளாவதுடன், நம் மீது வெறுப்பும் ஏற்பட வாய்ப்புள்ளது. சில பெற்றோர் எப்போது பார்த்தாலும் சண்டையிட்டுக் கொண்டேயிருப்பார்கள். இதைக் காணும் அவர்களின் குழந்தைகள் அவர்கள் பிரயோகிக்கும் தூசன வார்த்தைகளையும், சண்டையிட்டுக் கொள்ளும் விதத்தையும்

கற்றுக் கொள்கின்றன. நான் சில வீடுகளில் சில குழந்தைகளை அவதானித்திருக்கின்றேன். அக்குழந்தைகள் நாம் கூட பயன்படுத்தக் கூசும் சொற்பிரயோகங்களை பயன்படுத்தி அதிகாரத் தொனியில் கதைப்பார்கள். அந்த தாய் தந்தையரும் சொல்வதறியாது திக்குமுக்காடி நிற்பர். சிலர் அதனை ஒரு பொருட்டாக எடுத்துக் கொள்ளமாட்டார்கள்.

உண்மையில் குழந்தைகள் அதிக விடயங்களை குறிப்பாக (ஒழுக்கம் சார் விடயங்களை) பெற்றோரிடமிருந்தே கற்றுக் கொள்கின்றனர். காரணம் பெற்றோர்களே அவர்களின் றோல் மொடல்கள் அல்லவா. பெற்றோர் தங்களது முரண்பாடான விடயங்களை குழந்தைகள் இல்லாத நேரங்களில் பேசித் தீர்த்துக் கொள்ளவது சிறந்தது. சிலநேரங்களில் நீங்கள் சண்டையிட்டுக் கொள்வதை அவர்கள் எதேச்சையாக கண்டுவிட்டால் சற்று சுதாகரித்துக் கொண்டு வேறு ஏதாவது கூறி அவர்களை திசை திருப்புங்கள்.

நான் பத்திரிகையில் வாசித்த உண்மைச் சம்பவமொன்றை இவ்விடத்தில் உங்களுக்கு கூறுகின்றேன்.

‘‘கொழும்பில் பிரபலமான பாடசாலைகளிலொன்றில் உயர்தரத்தில் கல்வி பயிலும் அந்த மாணவன் தன் தாயை கைத்துப்பாக்கியால் சுட்டுக் கொன்றான். அவன் பயன்படுத்தியது தன் தந்தையின் துப்பாக்கி. தந்தை பொலிஸ் திணைக்களத்தில் உயர்பதவி வகிக்கின்றார். அவர் குளியலறைக்குச் செல்கையில் தனது கைத்துப்பாக்கியை மேசையின் மீது வைத்து விட்டுச் சென்ற சமயமே இச்சம்பவம் நிகழ்ந்துள்ளது. தாயும் ஓர் அரச ஊழியர். ஏன் தனது தாயைக் கொல்ல வேண்டும்? என்று அவனிடம்

விசாரணை செய்தபோது, ‘‘எனது தாய் எனது தந்தையுடன் எப்போது பார்த்தாலும் சண்டையிட்டுக் கொண்டிருப்பார். நான் எத்தனையோ தடவைகள் கூறியும் அவர் கேட்பதாக இல்லை. நான் பாடசாலையை விட்டு வீட்டுக்கு வந்தால் நிம்மதியில்லை. அதனால் தான் சுட்டுக் கொன்றேன்’’ எவ்விதக் கலக்கமுமின்றி வெறுப்புடன் கூறினான் அந்த மாணவன்.

இச்சம்பவத்தில் அவன் தன் தாயைக் கொன்ற கொலைகாரன் என்பதில் எவ்வித சந்தேகமுமில்லை. ஆனால், அதற்கு அடிப்படைக் காரணமாக அமைந்ததே அவனது தாய் தானே. அவளைக் கொல்லத் துணியுமளவுக்கு அந்தத் தாய் மீது அவனுக்கு அவ்வளவு வெறுப்பிருந்திருக்கிறது. அவனுக்கு தண்டனை கிடைப்பதற்கு காரணமும் அந்தத் தாய் தானே. ஆகவே, நாம் நமது குழந்தைகளின் முன் சண்டையிட்டுக் கொள்வதை நிறுத்துவோமாக !

## 12. தனிமையில் கேளுங்கள் அவமானப்படுத்தாதீர்கள்



எனது தந்தை எனது நண்பனொருவனின் முன்னிலையில் எனது கன்னத்தில் அறைந்ததினால் வீட்டை விட்டு வெளியேறி சுமார் இரண்டு வருடங்கள் அவருடன் எவ்விதத் தொடர்புமின்றி இருந்தேன். இது என் வாழ்வில் நிகழந்த உண்மைச் சம்பவம்.

அவமானம் என்பது யாராலும் தாங்கிக் கொள்ள முடியாதவொன்று சூப்பனகையின் மூக்கை வெட்டி இலக்குமனன் அவளை அவமானப்படுத்தியதால் சீதையை இராவணன் கவர்ந்து சென்றதும், ஆஞ்சநேயர் இலங்கையைக் கொழுத்தியதும், இராமனுக்கும் இராவணனுக்கும் போர் ஏற்பட்டு இராவணன் மாண்டு செல்லும் வரை தொடர்ந்தது பகை என்று இராமாயனத்தில் நீங்கள் படித்திருப்பீர்கள்.

நபிகளை அவமானப்படுத்தியதால் ஹம்ஸா (றழி) அவர்களிடம் அடிவாங்கினார் அபூஜஹ்ல். இதை நீங்கள் நபிகளின் சீறாவில் வாசித்திருப்பீர்கள்.

உண்மையில் அவமானப்படுத்துவது என்பது மனித உரிமை மீறல்களில் ஒன்றாகும். எந்தவொரு நபரையும் நாம் பார்வையாலோ, சொல்லினாலோ, செயலினாலோ அவமானப்படுத்தக் கூடாது என்பது பற்றி ஐநாவின் சாசனத்தில் குறிப்பிடப்பட்டுள்ளது. ஆனால், பெரும்பாலும் நமது ஆசிய நாடுகளிலேயே பிறரை கேலி செய்வதும், அவமானப்படுத்துவதும் கூடுதலாகக் காணப்படுகின்றது. சில ஐரோப்பிய நாடுகளில் தெரியாத ஒருவரைப் பார்த்து சும்மா சிரித்தால் கூட அவமானப்படுத்தியதாக வழக்கொன்றைக் கூட தொடரலாம். ஆனால், நாம் நமது பார்வையிலேயே பிறரை அவமானப்படுத்துகின்றோம்.

முகம்மத் (ஸல்) அவர்கள் இவ்வாறு கூறுகின்றார்கள்:-

**“எந்தவொரு முஸ்லிமின் அங்கங்களிலிருந்து இன்னொரு முஸ்லிம் பாதுகாப்பு பெறுகின்றோனோ அவனே உண்மையான முஸ்லிம்”**

ஆகவே, இங்கு பிறரை நாம் எந்தவிதத்திலும் காயப்படுத்தாமல் இருக்க வேண்டுமென்று இந்த ஹதீஸின் மூலம் சுட்டிக் காட்டப்படுகின்றது.

பெரும்பாலானவர்கள் தங்களது குழந்தைகளை பிறர் முன்னிலையில் ஏசுவதன் மூலமோ, அடிப்பதன் மூலமோ அவமானப்படுத்தி விடுகின்றனர். இதன் மூலம் குழந்தைகள் மனதில் அவமானப்படுத்தியவர் பற்றிய ஒரு வித அச்ச

உணர்வுடன் கூடிய வெறுப்பு உருவாகின்றது. குழந்தைகள் தவறு செய்யக் கூடியவர்கள். அதை அவர்கள் வேண்டுமென்ற எண்ணத்துடன் செய்வதில்லை. மாறாக குழந்தைத்தனம் தான் அதற்குக் காரணம்.

குழந்தையொன்று தற்செயலாக கண்ணாடிக் குவளை (glass) ஒன்றையோ அல்லது ஏதாவது பெறுமதிமிக்க பொருளையோ உடைத்துவிடும் போது தாயோ தந்தையோ ''நாசமாப் போச்சு அல்லது எவ்வளவு அருமாந்த பொருள்'' என்று தமது குழந்தையை விட அச்சடப் பொருளே மதிப்புள்ளது என்ற எண்ணத்துடன் செயற்படுகின்றனர். தமது குழந்தை அறியாமலேயே அப்பொருளை உடைத்துவிட்டது என்பதை அவர்கள் சற்றும் உணர்வதில்லை. சில வீடுகளில் சிலருக்கு பிற குழந்தைகளைக் கண்டால் பிடிப்பதில்லை. எங்கே தமது வீட்டிலுள்ள பெறுமதிமிக்க பொருட்களை உடைத்து விடுமோ என்ற பயத்தில் அக்குழந்தைகள் அவ்வீட்டை விட்டு வெளியேறும் வரை சீஐடி போல் நோட்டமிட்டுக் கொண்டே இருப்பர். இது நம்மவர் சிலரின் பின்தங்கிய உளநிலை. பொருள்வாதக் கொள்கையுடையோர்.

இன்று பாடசாலை வகுப்பாசிரியர்கள் கூட தவறு செய்த குழந்தையை பிற குழந்தைகளின் முன்னிலையில் வைத்து அடிப்பதும், அவமானப்படுத்துவதும், பட்டப்பெயர் சூட்டுவதும் தாராளமாக நடக்கின்றது. காரணம் கேட்டால், Discipline (ஒழுக்கம்) என்பர். ஒரு சமயம் எனது மனைவி மிகுந்த கோபத்துடன் வந்து என்னிடம் கூறியது **''அந்த ******** மாஸ்டர் நம்மட ஆசிக்குக்கு மூத்திரக் குஞ்சன் என்று பட்டப் பெயர் சொல்லி மற்றப் பிள்ளைகள் முன்னிலையில்**

**அவமானப்படுத்தி இருக்கான். அவன நாலு வார்த்த கேட்கணும்''** என்று. இங்கு நான் அவ்வாசிரியரின் பெயரைக் குறிப்பிட விரும்பவில்லை. அவர் நல்லதோர் ஆசிரியர். ஆனாலும் ஏன் இவ்வாறு நடந்து கொண்டார் என்று அப்போது எனக்குப் புரியவில்லை.

இன்னொரு தடவை, எனது மகளின் தலையில் ஓர் அடி போட்டிருக்கிறார் அவளது வகுப்பாசிரியர். காரணம் கேட்டேன் மகளிடம். அதற்கவள், **"நேத்து ஆடு கத்தும், மாடு கத்தும் என்டு என்ட டீச்சர் படிப்பிச்சா. இன்டக்கி அவ கத்தாதீங்க புள்ளயள் என்டு சொல்ல, நான் கேட்டன் "ஆடு, மாடு தானே கத்தும் டீச்சர். அப்படின்டா நாங்களும் ஆடு மாடுகளா?'' என்டு. அதற்கவ "உனக்கு வாய் கூட என்டு அடிச்சா''** என்றாள்.

இவ்வாசிரியர் ஆசிரியத் தொழிலுக்கே பொருத்தமற்றவர் என்பேன் நான். எனது பிள்ளைக்கு அடித்ததற்கல்ல. குழந்தையின் ஞாபகத் திறனையும், பிரித்துணரும் திறனையும் புரிந்து கொள்ளாமல் நடந்து கொண்டதற்கேயாகும்.

குழந்தைகளை பிற குழந்தைகளுடன் ஒப்பிட்டுப் பேசுவதோ, அவர்களின் முன்னிலையில் பிறரை இழிவுபடுத்திப் பேசுவதோ கூடாது. **"தீயினால் சுட்ட புண் ஆறிடும். ஆனால், நாவினால் பேசிய வார்த்தை ஆறாது''** என்றார் திருவள்ளுவர். உண்மைதான்.

அவர்கள் ஏதேனும் தவறுகள் செய்தால், அவர்களை தனியாகக் கூட்டிச் சென்று சொல்லிக் கொடுங்கள். இனிமையான வார்த்தைகளால் கூறுங்கள். இனியும் இவ்வாறு நடந்து

கொள்ளாமல் இருந்தால் பரிசு தருவேன். நல்ல பிள்ளையாக நடந்து கொள்ள வேண்டுமென்று கூறுங்கள். (உண்மையாகவே பரிசளியுங்கள்). அதையே அவர்களும் விரும்புவார்கள். உங்களை யாராவது பலரின் முன்னிலையில் வைத்து அவமானப்படுத்தினால் எப்படியிருக்கும்? அவ்வாறு தான் குழந்தைகளுக்கும். அவர்கள் இன்னொருவரின் முன்னிலையில் தான் அவமானப்படுவதை விரும்பமாட்டார்கள். காரணம், அவர்களுக்கும் உணர்வுகள் உண்டு. அவர்களும் மனிதர்கள். உங்களைப் போன்று தன்மானமுள்ளவர்கள் என்பதை மறந்து விடாதிருப்போமாக !

## 13. நம்பிக்கையுடனிருங்கள் நம்பிக்கையூட்டுங்கள்



நீண்ட நாட்களுக்குப் பின்னர் தன் தாயின் ஞாபகத்தில் அவளின் இறப்புக்குப் பின்னர் அவளது பழைய பொருட்களை ஆராயும் போது அந்தக் கடிதம் கையில் கிடைத்தது. அதில் ''இவன் கல்வி கற்பதற்கே லாயிக்கற்றவன். மந்த புத்தியுடையவன்'' என்ற வரிகளைக் கண்டவுடன், அவர் கண்கள் கலங்கிவிட்டன. காரணம் அவர் சிறுவனாக இருக்கும் போது தனது தாயிடம் தனது வகுப்பாசிரியர் இக்கடிதத்தை ''உங்களிடம் கொடுக்கச் சொன்னார்'' என்று கூறி கொடுத்தவுடன், தாய் அக்கடிதத்தில் எழுதியிருந்தவற்றை வாசிக்கவில்லை. மாறாக ''இவன் ஒரு கெட்டிக்காரன். கல்வி கற்று உலகளவில் பிரபலமாவான்'' என்று மாற்றியே வாசித்தார். அவரின் தாய் அவருக்கு சிறுவயது முதலே நம்பிக்கையூட்டினார். அதனால் அவர் இன்று உலகளவில் பேசப்படும் ஒரு சிறந்த கண்டுபிடிப்பாளரும் விஞ்ஞானியுமான

தோமஸ் அல்வா எடிசன். இயல்பிலேயே ஒரு காது கேளாதவர். பாடசாலையின் முறையான கல்வியிலிருந்து விரட்டப்பட்டவர். ஆனாலும், தன் தாயின் நம்பிக்கையூட்டலாலும், விடாமுயற்சியாலும் விஞ்ஞானியாகி உலகின் வரலாற்றையே மாற்றியமைத்தவர்.

''ஹரிதாஸ்'' சினிமாவுலகில் ஒரு சிறந்த திரைப்படம். நம்பிக்கை எனும் சொல்லுக்கு வரைவிலக்கணத்தை காணொளியினால் கூறும் தமிழ் திரைப்படம். அப்பாவின் நம்பிக்கையே அவனை சிறந்ததோர் அஞ்சலோட்டப் பந்தய வீரனாக மாற்றுகிறது. அவன் குறுந்தூர



அஞ்சலோட்டத்திலேயே வெற்றி வாகை சூடுவான் என்பதில் நம்பிக்கை கொள்கின்றார் அவனது அப்பா.

அல்குர்ஆனும் நம்மை நம்பிக்கையாளர், விசுவாசிகள் என்று தானே விளிக்கின்றது. நமது வாழ்வும் நம்பிக்கையின் மீதே

கட்டியெழுப்பப்பட்டிருக்கின்றது. அடுத்த நிமிடம் நாம் உயிர்வாழ்வோம் என்பதும் நம்பிக்கை தானே. பறவைகள் தம் கூடுகளை விட்டு இரைதேடிச் செல்வதும் நம்பிக்கையே. நாளை நமது துயரங்கள் நீங்கி மகிழ்ச்சியாக இருப்போம் என்பதும் நம்பிக்கையே. நான் இக்கணம் எழுதிக் கொண்டிருப்பதும் ஒரு நம்பிக்கையில் தான். குழந்தைகளுக்கு எப்போதும் நாம் நம்பிக்கையூட்டிக் கொண்டேயிருக்க வேண்டும். நீங்கள் பெற்றோர்களாக இருப்பினும் சரி ஆசிரியர்களாக இருப்பினும் சரியே குழந்தைகளுக்கு நம்பிக்கையூட்டுங்கள். நீங்கள் வாங்கிக் கொடுக்கும் புத்தகங்களை விட, நீங்கள் வகுப்பறையில் கற்றுக் கொடுக்கும் பாடங்களை விட, நீங்கள் ஊட்டும் நம்பிக்கையே பெறுமதி வாய்ந்ததும், பயன்தரக் கூடியதுமாகும்.

குழந்தை பரீட்சையில் குறைவான மதிப்பெண்களைப் பெற்றால், அவர்களுக்கு ஏசுவதை விட்டு விட்டு அடுத்த தடவை ''நீங்கள் எடுப்பீங்க செல்லம்'' என்று நம்பிக்கையூட்டுங்கள். அவர்கள் ஏதாவது ஒரு செயலைச் செய்யும் போதும் அருகிலிருந்து நம்பிக்கையூட்டுங்கள். நீங்கள் உங்கள் குழந்தைகளுக்கு செலவழிக்கும் பணத்தை விட நம்பிக்கையே இலாபத்தை ஈட்டித் தரும். நம்பிக்கையீனம் தான் தோல்விக்கும் இழப்புக்கும் முதன்மைக் காரணிகள். நம்பிக்கை என்பது எண்ணத்துடன் தொடர்புடையது. அதனால் தான் நபியவர்கள்

**"انما الأعمال بالنيات"** - ''செயல்கள் அனைத்தும் எண்ணங்களின் வெளிப்பாடே'' என்றார்கள். எண்ணமென்பது நம்பிக்கையே தவிர வேறொன்றுமில்லை.

நாம் குழந்தைகளுக்கு நம்பிக்கையூட்டும் பல சிறுவர் கதைப் புத்தகங்களை பரிசளிக்கலாம். அதன் மூலமும் அவர்களது நம்பிக்கை வளரும். தனது செயலில் நம்பிக்கையுடன் இருப்பர். நோய் ஏற்பட்டால் சரியாகி விடும் என்று நம்பிக்கையூட்டுங்கள். எல்லா விடயங்களிலும் நம்பிக்கையூட்டுங்கள்.

முதலில் நீங்களும் தன்நம்பிக்கையுடனிருக்க வேண்டும். அப்போது தான் நீங்கள் உங்கள் குழந்தைகளுக்கு நம்பிக்கையூட்டுபவர்களாக மாறுவீர்கள் என்பதில் நம்பிக்கையுடனிருங்கள் !

## 14. கண்டபடி வேலை வாங்காதீர்கள்



**"கொஞ்சம் கடைக்கு போய்ட்டு வாம்மா. எனக்கேலா. ஏன்டா ஏலா?. இப்பதான் ஸ்கூல்லருந்து வந்தனான். சரி இந்தாங்க அஞ்சுருவா ஒரு சொக்லட் பக்கட்டு வாங்கிக்கிங்கடி தங்கம், போய்ட்டு வாம்மா. சரி அஞ்சுருவா தாங்க இப்ப."**

இது அதிகமான வீடுகளில் தாய்க்கும் குழந்தைக்குமிடையே நடக்கும் உரையாடல். பேச்சும், தொனியும் வித்தியாசமாக இருந்தாலும் குழந்தைகளை வேலை வாங்குவதென்பது எல்லா வீடுகளிலும் நாளாந்தம் நடைபெறும் ஒரு விடயம். நீங்கள் உங்கள் குழந்தைகளிடம் முற்று முழுதாக வேலை கொடுக்கக்கூடாது என்று நான் சொல்லவில்லை. மாறாக எந்நேரமும் அவர்களுக்கு அலுப்பு ஏற்படுமாறு வேலை வாங்குவதை தவிர்த்துக் கொள்ளுங்கள் என்றே சொல்கின்றேன். வேலை செய்யாமலிருந்தாலும் அவர்கள்

சோம்பேறியாகிவிடுவார்கள் என்று நாம் கருதுகின்றோம். அதுவும் ஒரு விதத்தில் உண்மை தான். ஆனால், அதிக வேலை கொடுப்பதென்பது அவர்களுக்கு மன உளைச்சலை ஏற்படுத்தும். இன்று குழந்தைகள் கடைக்குச் செல்வதென்பது சர்வ சாதாரணம். சில்லறைக்கடை முதல் உணவகம் வரை குழந்தைகள் சென்று வருகின்றனர். சில குழந்தைகள் பிச்சை கேட்டு வருவதைக் கூட கண்டிருக்கின்றேன். உண்மையிலேயே அவர்கள் பெற்றோரை இழந்து தவிக்கின்றனரா அல்லது யாராவது ஒருவரின் கட்டளைக்கமைய பிச்சைத் தொழில் செய்து அவர்களுக்கு சம்பாதித்துக் கொடுக்கின்றனரா என்பது பற்றி என்னுள் பல சந்தேகங்கள் எழும். என்ன செய்வது நானும் ஒரு ஏழை என்பதாலும் அவர்களின் பொருளாதாரத்தை சீர்படுத்துமளவு சக்தி என்னிடமில்லை என்பதாலும் கையிலிருக்கும் பணத்தைக் கொடுத்து விடுவேன். இது இஸ்லாத்திற்கு முரணான செயல் என்பது எல்லோருக்கும் தெரியும். ஆனால், தனவந்தர்கள் ஒன்றுக்கு இரண்டு முறைகள் யாத்திரை செல்வதையும், வீணான செலவுகளையும் குறைத்து, இஸ்லாமியப் பொருளாதாரத் திட்டத்தை உரிய முறையில் நிறைவேற்றினால் வறுமையை ஒழிக்கலாம். என்னடா இது தலைப்பை விட்டு அப்பால் செல்கின்றேன் என்று யோசிக்காதீர்கள். சில விடயங்கள் ஞாபகத்திற்கு வரும்போது தான் சுட்டிக் காட்ட முடியும்.

சில தந்தைமார் குழந்தைகளை சிகரட், சுருட்டு போன்றவற்றை வாங்கி வருமாறு கடைக்கு அனுப்புகின்றனர். உண்மையில் இது ஒரு முறையற்ற செயலாகவும், குழந்தைகளும் அப்பழக்கத்தில் ஈடுபட தூண்டுதலாகவும் அமைகின்றது. நகர்ப்புரங்களில் குழந்தைகளை வீட்டு வேலைகள் செய்யும் வேலைக்காரர்களாக

பயன்படுத்துகின்றனர். பெரும்பாலும் பெண் குழந்தைகளே இதற்கு அமர்த்தப்படுகின்றனர். வேலைக்கு அமர்த்தும் போது தமது குழந்தைகளைப் போலவே பார்த்துக் கொள்வோம் எனும் ஆசை வார்த்தைகளைக் காட்டுவர். போகப் போக அவர்களது சுயரூபம் வெளிப்பட ஆரம்பிக்கும். இதில் பெரும்பாலும் மலையக மற்றும் கிராமப்புர குழந்தைகளே மாட்டிக் கொண்டு முழிப்பர். சில சந்தர்ப்பங்களில் அவ்வீடுகளில் இருக்கும் பால்வினைசார் மனநோயாளர்களினால் அக்குழந்தைகள் துஷ்பிரயோகத்திற்கு உள்ளாக்கப்படுவதும் உண்டு. சிலவேளைகளில் எஜமானியம்மாவின் கொடூர தாக்குதல்களுக்குள்ளாகி வைத்தியசாலையில் அனுமதிக்கப்படும் நிலையும் ஏற்படும்.

குழந்தைகளைப் பொறுத்த வரையில் அவர்கள் குழந்தைகளாக வாழவே விரும்புகின்றனர். தங்களுக்கு தாயும் தந்தையும் பணிவிடை செய்ய வேண்டுமென்பது அவர்களின் எதிர்பார்ப்பு. சிலர் குழந்தைகள் என்போர் தங்களின் அடிமைகள், பொம்மைகள் என்றெல்லாம் கற்பனை காணுகின்றனர். இது அவர்களின் குறுகிய எண்ணமேயாகும். அவர்கள் தாம் குழந்தைகளாக இருந்ததை மறந்துவிட்டனர் போலும். நாம் குழந்தைகளுக்குத் தரும் வேலைகள் அவர்களின் விருப்பத்திற்கும் சக்திக்கும் உட்பட்டதாகவே இருக்க வேண்டும். பாரமான வேலைகளையோ, உயிராபத்தை ஏற்படுத்தும் வேலைகளையோ கொடுக்கக் கூடாது. நாம் வேலைகளைச் செய்யும் போது அவர்களையும் அருகில் வைத்துக் கொண்டு பழக்கலாம். உதாரணமாக, செடிகளுக்கு நீர் பாய்ச்சுவது, காய்கறிகளை வெட்டுதல், வீட்டைச் சுத்தம் செய்தல், ஆடைகளைக் கழுவுதல் போன்ற இன்னோரன்ன வேலைகளைச் செய்கையில் குழந்தைகளையும் அருகில் வைத்திருங்கள்.

முடிந்தளவு குழந்தைகளை இரவு நேரங்களிலோ அல்லது ஆள்நடமாட்டமில்லாத பொழுதுகளில் வெளியிலோ, கடைக்கோ அனுப்புவதை விட்டும் தவிர்ந்து கொள்ளுங்கள். இவ்வாறெல்லாம் கூறி உங்களை அச்சமூட்டவில்லை.

**‘வருமுன் காப்பதே சிறந்தது’**

## 15. குழந்தையின் பிரச்சனையுடன், திறமைகளையும் இனங் காணுங்கள்



"ஒவ்வொரு மனிதனும் பிறக்கும் போதே ஓர் அதீத திறமையுடனும் ஒரு பிரச்சினையுடனுமேயே பிறக்கின்றான். பிரச்சனையுடன் பிறக்கும் குழந்தைகள் சாதிக்கத் தகுதியற்றவர்கள் என்பது கருத்தல்ல"

| **உலக சாதனையாளர்கள்** | **உடலியல் பிரச்சனைகள்** | **துறைசார் சாதனைகள்** |
|---|---|---|
| தோமஸ் அல்வா எடிசன் | காதுகேளாமை | 1001 கண்டுபிடிப்புக்கள் |
| அல்பேர்ட் ஐன்ஸ்டின் | இரண்டு வயது வரை பேசவில்லை, | இயற்பியல், புகழ்பெற்ற சார்புக் |

| | | |
|---|---|---|
| | நரம்பியல் நோய் பாதிப்பு, ஆரம்பக்கல்வியில் கணிதத்தில் குறைபாடு | கோட்பாடு ($E=mc^2$), அண்டவியல், 1921 இல் நோபல் பரிசு, நவீன விஞ்ஞானத்தின் தந்தை |
| மைக்கல் ஜெக்சன் | வெண்குஷ்ட நோயினால் பாதிப்பு, அப்பாவினால் உடல் மற்றும் உளவியல் பாதிப்புக்கு உள்ளாகியமை, நெஞ்சுவலி, முதுகுவலி | உலகத்திலேயே சிறந்த நடனக்காரர், 2007 ஆம் ஆண்டின் படி சுமார் 236 மில்லியன் அமெரிக்க டொலர் பெறுமதியான சொத்துக்கள் |
| ஆபிரகாம் லிங்கன் | இரண்டு தடவை மலேரியா தாக்கம், பால்வினை நோய், சின்னம்மை, வயதை விட அதிக வளர்ச்சி, அதிக துக்கம் | அமெரிக்காவின் 16 வது சனாதிபதி, வழக்கறிஞர் |
| நெல்சன் மண்டேலா | நுரையீரல் பாதிப்பு, கண்ணீர் குழாய்கள் சேதமடைந்திருந்தது | தென்னாபிரிக்காவின் சனாதிபதி, கொடையாளர், வழக்கறிஞர், 1993 நோபல் பரிசு |
| சில்வெஸ்டார் ஸ்டெலௌன் | ஒரு பக்க முகம் பக்கவாதத்தினால் பாதிப்பு | ஹொலிவூட் திரைப்பட நடிகர், தயாரிப்பாளர், கதாசிரியர், |



**ஸ்டீபன் ஹோக்கிங் :-**

இங்கிலாந்தின் கேம்பிரிட்ஜ் பல்கலைக்கழகத்தில் கணிதத்துக்கான பேராசிரியர். அண்டவியல், புவியீர்ப்பு, கருங்குழி மற்றும் வெப்பவியல் சார் ஆய்வுகளை மேற்கொண்டு வருகின்றார். 21 வயதிலேயே அமையோட்ரோபிக் லேட்டரல் ஸ்க்லெரோசிஸ் எனும் நரம்பியல் நோயினால் பாதிக்கப்பட்டு கை, கால் வழக்கற்று தன்னியக்க நாற்காலியில் அமர்ந்த வண்ணம் பிறருடனான தொடர்பாடலை கணனியின் உதவியுடன் மேற்கொண்டு வருகின்றார். இவரது முக்கிய சிறந்த படைப்பான A Brief History of Time என்ற நூலை ஒரு கோடி ரூபாய் இந்திய செலவில் “நேரத்தின் சுருக்க வரலாறு” எனும் பெயரில் 2000 ஆம் ஆண்டில் உலகத் தமிழ்மொழி அறக்கட்டளையால் மொழிபெயர்க்கப்பட்டது. (இந்நூலை நான் எழுதும் போது உயிருடன் இருந்தார்)

இவ்வாறாக வாழ்நாள் சாதனையாளர்களை பட்டியலிட்டுக் கொண்டே செல்லலாம். அவர்கள் தங்களிடமிருந்த குறைகளை முறியடித்து சாதனையாளர்கள் ஆனார்கள். அதற்கு அவர்கள் முதலில் என்ன செய்தனர்? விஷேட மருத்துவரிடம் சென்றனரா? என்று கேட்டால், இல்லவே இல்லை. வாழ்வில்

தன்னம்பிக்கையுடன் செயற்பட்டதே அவர்களின் வெற்றியின் இரகசியம்.

இன்று பாடசாலைக் கல்வியானது வெறுமனே பரீட்சையையும், பரிசில்களையும் இலக்காகக் கொண்ட ஒன்றாகவே இருக்கின்றது. மாணவர் மையக்கல்வி என்பது அரிதாகவே காணப்படுகின்றது. பாடசாலைக்கு வந்தோமா, கொப்பிகளை திருத்தினோமா, வீடு சென்றோமா, சம்பளம் எடுத்தோமா என்றே பெரும்பாலான ஆசிரியர்களின் பங்கு இருக்கின்றது.

விரல்விட்டு எண்ணக்கூடிய ஆசிரியர்களே தாம் வாங்கும் சம்பளத்திற்கு மனசாட்சியுடன் நடந்து கொள்கின்றனர். வகுப்பறை என்பது குழந்தையின் பிரச்சனையை இனங்கண்டு தீர்ப்பதற்கும், ஆற்றல்களை இனங்கண்டு வளர்ப்பதற்குமான களமுமாகும். அதைவிடுத்து, கரும்பலகைக்கும் வெண்கட்டிக்குமான யுத்தமல்ல. அன்று எடிசனின் பிரச்சினையை இனங்கண்ட ஆசிரியர் அவனது ஆற்றலை இனங்காணத் தவறிவிட்டார். அவனது ஆற்றலை இனங்கண்ட அவனது தாய் அவன் 1001 கண்டுபிடிப்புக்களை நிகழ்த்துவதற்கான களத்தை வீட்டிலேயே உருவாக்கிக் கொடுத்தார். இது உலகறிந்த உண்மையும் சிறந்ததொரு உதாரணமுமாகும்.

நாம் கற்றுக் கொடுப்பது குழந்தைகளுக்கு பிடிக்கவில்லையானால் குழந்தைகளுக்குப் பிடிப்பதை கற்றுக் கொடுக்கலாம் தானே. நாம் எதிர்பார்க்கும் திறன்கள் குழந்தைகளிடம் இல்லாவிட்டால் குழந்தைகளிடம் இருக்கும் திறன்களை வளர்க்கலாமே. ஒவ்வொரு குழந்தையிடமும் ஏதோ ஒரு ஆற்றல் மறைந்து காணப்படும். அதை வெளிக்கொணர்வது தான் கல்வி. சில குழந்தைகள் காரண

காரிய அறிவில் திறமையைக் காட்டுவர். வேறு சில குழந்தைகள் கணிதத்தில் அதிவிவேகியாக இருப்பார்கள். இன்னும் சிலர் மொழியறிவில் விருப்பம் காட்டுவர்.

இன்று பட்டத்துக்கு மேல் பட்டங்களை பெறுகின்ற பல ஆசிரியர்கள் ஒரு சில குழந்தைகளை வைத்துக் கொண்டு குரங்கு வித்தை காட்டுகின்றனர். (நான் எல்லா ஆசிரியர்களையும் குறிப்பிடவில்லை). டாவின்சியின் கூர்ப்புக் கொள்கையை நிரூபிக்கின்றனர். குரங்குகள் தான் பழக்கியபடி குட்டிக்கரனம் போடும். ஆனால் நம் குழந்தைகள் சிந்திக்கும் மனிதர்கள் என்பதை மறந்து விட்டார்கள்.

ஒரு வகுப்பறையில் 40 குழந்தைகள் இருந்தால், அதில் குறைந்தது 15 குழந்தைகள் 40/100 புள்ளிகளை எடுக்கும். அதில் 8 குழந்தைகள் 55/100 புள்ளிகளை எடுக்கும். அதில் 10 குழந்தைகள் 65/100 புள்ளிகளை எடுக்கும். அதிலும் மூன்று அல்லது இரண்டு குழந்தைகளே 90 - 100/100 புள்ளிகளை எடுக்கும். அவ்வாறெனில் மீதி 4 குழந்தைகளின் கதி என்ன? கேட்டால், அக்குழந்தைகள் ''மக்கு'' ஒன்றுக்கும் உதவாதவன்/ள்'' ''படிக்காதவர்களின் குழந்தைகள்'' ''அவனுக்கு/அவளுக்கு படிப்பு வராது'' என்றெல்லாம் தமது இயலாமையை உணர்த்த குழந்தைகள் மீது பழி சுமத்துவர். இது காலாகாலமாக நடைபெறும் ஓர் சம்பிரதாயம் (?) உண்மையில் இந்த மக்குக் குழந்தைகளில் உருவானவர்கள் தான் தோமஸ் அல்வா எடிசன், ஹென்றி போர்ட், மைக்கல் ஜெக்ஸன், அல்பேர்ட் ஐன்ஸ்டைன் போன்றவர்கள் என்பதை மறந்து விடாதீர்கள். உண்மையில்

இவர்களை நாம் மெல்லக் கற்போர் (Slow Learners) என்றே அழைப்போம். அவரகள் வகுப்பறைக் கல்வியில் மெதுவாகத் துலங்கிய போதிலும் வேறுபல திறன்களைக் தமக்குள் கொண்டிருப்பர். உதாரணமாக, பிரான்சின் பாரிஸ் நகரிலுள்ள உலக அதிசயங்களில் ஒன்றான Effel Tower ஐ வடிவமைத்த அலெக்சாண்டர் கஸ்தவ் ஈபல் ஆரம்ப கல்வியில் ஏனைய குழந்தைகளை விட சற்று பின்னோக்கியே காணப்பட்டார். ஆனாலும், அவரின் நிர்மாணிப்பு உலக அதிசயம் ஆகவில்லையா? கணிதவியலாளர் மல்பா தஹ்ரான் சிறுவயது முதல் ஓர் இடையன். அவர் கணித தத்துவங்களை உருவாக்கவில்லையா?

திறமைகள் குழந்தைகளினுள் புதைந்து கிடக்கின்றன. அதை வெளிக் கொண்டு வருவதென்பது, பெற்றோரினதும் ஆசிரியரினதும் தலையாயக் கடமையாகும். ஒரு குழந்தை வாசிக்க கஷ்டப்படுகிறதென்றால், கற்பிக்கும் விதத்தை மாற்றுங்கள். குழந்தையின் மீது தனிக்கவனம் செலுத்துங்கள். முதலில் தாய்மொழிக் கல்வியை சரியான முறையில் கற்பியுங்கள் அது ஏனைய கற்றல்களிலுள்ள சிக்கல்களை காலப்போக்கில் சரியாக்கி விடும். அதற்கு ஒரேயொரு வழி தான் வாசிப்பு.

அல்குர்ஆன் மிக எளிமையாக அனைத்து பிரச்சனைகளுக்கும் தீர்வாக ‘‘வாசிப்பீராக’’ என்கிறது. ஆனால் நம்மிடத்தேயிருக்கும் பாரிய குறைபாடு வாசிப்பின்மையே. இன்று நூலகங்கள் வெறிச்சோடிக்கிடக்கின்றன. நூலகர்கள் சாப்பிட்டு விட்டு தூங்கும் நிலைக்கு நிலைமை மாறியுள்ளது. இந்நிலைமை மாற வேண்டுமென்றால் நாம் நமது குழந்தைகளுக்கு வாசிப்புப்

பழக்கத்தைக் கொடுக்க வேண்டும். அதற்கு நீங்களும் கொஞ்சம் வாசிக்கலாமே !


M.K. Althamish

நூல் வரிசை எண் - 05

# குழந்தைகளும் நாமும்

(வாழ்விலும் வாசிப்பிலும் பெற்ற அனுபவம்)

“...குழந்தைகளும் மரக் கன்றுகளே. தளிர்விட்டு வளர்பவர்கள். அவர்களிடத்தே அன்பு செலுத்துவதும், அவர்களுக்கு உணவு, உடை, உறையுள் அளிப்பதும் ஒவ்வொரு பெற்றோரின் மீதும் கடமையாகும். சிலர் குழந்தைகளின் விடயத்தில் கரிசனையில்லாமல் நடந்து கொள்கின்றனர். நாளடைவில் அக்குழந்தைகளும் அவரவர் பெற்றோர்களின் விடயத்திலும் அக்கறையின்றியே நடந்து கொள்வதுடன் பெற்றோரின் எண்ணங்களின்றியே வாழத் தொடங்கி விடுவர். நாம் இன்று நாளாந்த பத்திரிகைகளில் "பச்சிளங் குழந்தையின் கழுத்தை நெரித்துக் கொன்று புதைத்த தாய்", "தந்தையைக் கத்தியால் குத்திக் கொன்ற மகன்" எனும் செய்திகளை நாளாந்தம் காணக் கூடியதாகவுள்ளது. இவ்வாறான சம்பவங்கள் இடம்பெறுவதற்கான அடிப்படைக் காரணங்கள் என்ன?, யாரைக் குற்றங் காண்பது பிள்ளைகளையா? பெற்றோர்களையா?”




No. 21, Symonds Road,
Maradana, Colombo 01000,
Sri Lanka
Mobile: +94779121292
Email: althamish4@gmail.com

Price: Rs. 300/-

ISBN 978-955-35869-0-2